# ஹெர்குலிஸ்®

## வெறும் சைக்கிள் மட்டுமன்று — வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



உறுதிமிக்கது. மென்மையான ஓட்டம். ஹெர்குலிஸ் வாழ்நாள் முழுதும் உழைக்கத் தக்கபடி அமைந்தது. மிகஉயர்ந்த தரத்தில் தயாராகி, சகாயமான விலையில் கிடைக்கும் ஹெர்குலிஸ், சைக்கிள்களிலே சிறந்த முதலீடாக விளங்குகிறது.




® ஹெர்குலிஸ் சைக்கிள் & மோட்டார் கம்பெனி லிமிடெட், யு.கே. அவர்களின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள். இந்தியாவில் தயாரிப்போர்: டி ஐ சைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ் 53, டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், மதராஸ் 1. பதிவு பெற்ற உபயோகிப்போர்.



TIC-H-4398



# உங்கள் குடும்பத்தின் எதிர்காலம் பத்திரமாக இருக்க வழி செய்து விட்டீர்களா?

அவர்களுடைய எதிர்காலத்திற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டீர்களா? உயிலெழுதி விட்டீர்களா? அதை யார் நிர்வகிப்பார்கள்? வாழ்க்கையோ அநித்தியமானது—எந்த நிமிடத்தில் என்ன விபத்தோ, கஷ்டமோ உங்களைத் தாக்கும் என்று யாரால் சொல்ல முடியும்? எனவே, உங்கள் அன்புச் செல்வங்களின் எதிர்கால பாதுகாப்பை உறுதி செய்ய, கனரா பாங்க் உங்கள் உயிலின் எக்ஸிக்யூடராகவும் (நிர்வாகிகளாகவும்) ட்ரஸ்டியாகவும் இருக்கத் தயார். இந்த மிக முக்கியமான விஷயத்தைப் பற்றிய ஆலோசனையை இலவசமாகப் பெற, அருகாமையிலுள்ள கனரா பாங்க் கிளைக்கு விஜயம் செய்யுங்கள். உங்கள் குடும்பத்தினரின் எதிர்காலம், கனரா பாங்கின் கைகளில் பத்திரமாக இருக்கும்.



**கனரா பாங்க் லிமிடெட்**

(ஸ்தாபிதம்: 1906)

பதிவுபெற்ற அலுவலகம்: மேட்டுவர் ஹில், மங்களூர்.
நிர்வாக அலுவலகம்: 112, ஜயசாமராஜேந்திர ரோடு, பெங்களூர்.

**திரவிய சாதனங்கள் ரூ.141கோடிக்கு மேல் - கிளைகள் 245 க்கு மேல் - உலகெங்கும் பிரதிநிதிகள்**



# கல்கி



கவலை ஏன்?

(9-ம் பக்கம் பாருங்கள்)

# பொருளடக்கம்

இலக ஆனி 10 :: ஜூன் 23


| | | |
|---|---|---|
| காந்திஜியின் ஆசியைப் பெறுக! | — | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — | 8 |
| மீண்டும் நெருப்பா? | — | 14 |
| இலங்கைக் காட்சி | — | 17 |
| விசித்திர விமான நிலையம் | — | 18 |
| மகாபாரதம் | — | 22 |
| பாலைவனம் சோலைவனமாகியது | — | 26 |
| கவிபுரம் குகைக் கோயில் | — | 31 |
| இனிக்கும் நினைவுகள் | — | 33 |
| ஒநாய்க் கோட்டை | — | 42 |
| விவசாயிகளுக்கு ஒரு வரப்பிரசாதம் | — | 45 |
| பொன்னிவனத்துப் பூங்குயில் | — | 46 |
| நினைவிருக்கிறதா? | — | 55 |
| ஆதாரம் | — | 56 |
| இன்னும் பொறுத்திரு | — | 66 |
| விஞ்ஞானிகள் வரிசை | — | 75 |
| சிட்டிக் கவிராயரும் சிட்டிப்பல்லவமும் | — | 77 |
| பொன்னியின் செல்வரே வருக! | — | 80 |


கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 □ இதழ் 47



# காந்திஜியின் ஆசியைப் பெறுக!

இன்று இந்தியாவில் பலவிதமான மாய எண்ணங்கள் மக்களையும் சர்க்காரையும் பற்றிக் கொண்டுள்ளன. மாயைகளை மாயைகள் என உணரும் அறிவு பிறக்க வேண்டும். இது மட்டும் போதாது. மாயையின் இடத்தில் உண்மையை அமர்த்துகிற ஆக்கரீதியான காரியத்தைச் செய்தாக வேண்டும். இதுவே சுதந்திரக் கட்சியின் பணி. மாய மூட்டத்தினால் மறைக்கப்பட்டுள்ள உண்மைகளை மக்களுக்கு உணர்த்தும் மனிதர்களைக் கண்டுபிடித்து அவர்களைக் கட்டுக்கோப்பாகச் செயல் புரியச் செய்கிற பணி சுதந்திரக் கட்சிக்கு உரியது. ஒரு பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் உணர்வு படைத்தவர்களும், கடும் உழைப்பில் மகிழ்ச்சி காண்பவர்களுமான மக்கள் ஒன்றுகூடினாலே இந்தக் காரியம் நடக்கும்.

பிரிட்டிஷ் ஆட்சித் தளையிலிருந்து நாம் விடுபடுவதற்கு நீண்ட நாட்களுக்கு முன்னால் ஒத்துழையாமையை எதிர்த்த சிலர் அகில இந்திய காங்கிரஸ் கூட்டம் ஒன்றில் காந்திஜியைப் பற்றி ஓர் அபிப்பிராயம் தெரிவித்தனர். மனிதர்களைக் காந்திஜி களிமண்ணாக்கி விடுகின்றார் என்பதே இந்த அபிப்பிராயம். காந்திஜி தம்மைப் பின்பற்றுபவர்களின் தனித் தன்மைகளை எல்லாம் உறிஞ்சிக் கொண்டு, அவர்களைத் தம் கையில் அடக்கிக் கொண்டு களிமண்ணை இஷ்டப்படி பொம்மையாக்குவதுபோல் தம் விருப்பப்படி உருமாற்றிக் கொண்டிருந்தார் என்பது அவர்களுடைய குற்றச்சாட்டு. இதை நான் ஆட்சேபித்தேன். (காந்திஜி இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளவில்லை. அப்போது அவர் சிறைவாசம் செய்து வந்ததாக ஞாபகம்.) வெறும் களிமண்ணாக இருந்த மனிதர்களைக்கூட காந்திஜி பெரிய தீரர்களாக்கி விடுகிறார் என்று நான் வலியுறுத்தினேன்.

இன்று தீரர்களைக் கண்டுபிடித்தாக வேண்டும். மாயைகளை மாய்த்து உண்மைகளை நிலைநாட்டுகிறவர்களை ஒன்று திரட்ட வேண்டும். சாமானியக் களிமண்ணை ஒரு பணிக்காகப் போராடும் வீர தீரர்களாக்குவதற்கு இன்று ஒரு காந்திஜி நம்மிடையில்லை. என்றாலும் இந்தக் காரியம் அவசரமானபடியால் நாமே நம்மால் இயன்ற அவ்வளவும் செய்யத்தான் வேண்டும். மகாபுருஷன் ஒருவன் வருவதற்காக நாம் காத்திருப்பதற்கில்லை. களிமண்ணை வீர தீரராக்கும் காந்திய ரஸவாதமின்றியே சுதந்திரக் கட்சியின் புரட்சியை நிறைவேற்றியாக வேண்டும். கட்சியால் தங்களுக்கு ஓர் ஆதாயமும் எதிர்பாராமல் உத்வேகத்துடனும் சக்தியுடனும் உழைக்கும் தொண்டர்கள் நமக்கு அவசியத் தேவையாகும். இவர்கள் தமது கருத்தில் மன உறுதி வாய்ந்தவர்களாக இருக்க வேண்டும். கட்சியினால் தங்களை வளர்த்துக் கொள்ளாமல் கட்சியைத் தாங்கள் வளர்ப்பவர்களாக இருக்க வேண்டும். இன்று மாயப் பிரமைகளில் மக்களின் உணர்ச்சி பெரிதாகத் திரண்டிருக்கிறது. மாயைகளை மாய்க்கும்போதே இந்த உணர்ச்சிப் பெருக்கம் சத்தியத்தைச் சார்ந்திருக்குமாறு திருப்பிவிட வேண்டும். நாட்டில் உண்மைகள் நிலைபெற மக்களின் உணர்ச்சிகரமான உழைப்பு தேவை. எனவே, இன்று தவறான முறையில் உருவாகியுள்ள உணர்ச்சிக்குப் பதிலாக, நமது இலட்சியமாகிய புரட்சிக்குத் தேவைப்படும் புதிய உணர்ச்சியை உண்டாக்க வேண்டும்.

பொதுவாக இது சுதந்திரக் கட்சியின் பணி. குறிப்பாக ஒரு துறையில் அதன் பணியை முக்கியமாகச் சொல்ல வேண்டும். சுதந்திரக் கட்சி ஆற்ற விரும்பும் பணிகளில் மிகவும் சர்ச்சைக்குரியதும், மிகவும் கடினமானதும் இதுவே. அதாவது தொழில் உற்பத்தித் துறையிலும், வியாபாரத் துறையிலும், விவசாயத் துறையிலும் உரிமையாளர் - ஊழியர் ஆகியோரிடையே உள்ள பிணக்கத்தையும் பூசலையும் நீக்கி இணக்கத்தையும்

உண்மையான ஒத்துழைப்பையும் உண்டாக்குவதே சுதந்திரக் கட்சியின் முக்கியமான பணி. ஆரோக்கியமான மனிதனின் மூளையும் உடலும் எப்படி இசைந்துசெயல்படுகின்றனவோ, அவ்விதமே உரிமையாளரும் ஊழியரும் இசைவு பெற வேண்டும். இதுவே நாம் ஆவலுடன் விரும்பும் முன்னேற்றத்துக்கும், சுபிட்சத்துக்கும், மகிழ்ச்சிக்கும் வேராகும். பிணக்கு என்பது ஒரு வியாதி என்பதை உணர்ந்து, அது இலட்சியமுமல்ல, இலட்சியத்தை அடைய உதவும் உபாயமுமல்ல என்ற அறிவு பெற்று, அதனை அறவே கைவிட வேண்டும். உற்பத்தியிலும், உற்பத்தியை விநியோகிப்பதிலும் ஈடுபட்டுள்ள உரிமையாளரும் ஊழியரும் ஒரு குடும்பமாக உருவாவதற்கு நாம் முயல வேண்டும். தரமான பண்டங்களைப் பெருமளவில் விரைவாகச் செய்ய வேண்டும் என்ற இலட்சியத்தை நிறைவேற்றுவதில் பெருமிதத்தோடு எல்லா மட்டங்களிலுமுள்ள சிப்பந்திகளும், தொழிலாளர்களும், உயர்ந்த ஸ்தானத்தில் உள்ள மானேஜ்மென்டாரும் ஒன்றுபட வேண்டும். பிரசங்கத்தாலோ, வாதத்தாலோ இந்த நிலையைத் தோற்றுவித்துவிட முடியாது. தொழில்துறை என்கிற குடும்பத்தின் ஒவ்வோர் அங்கத்தினருக்கும் எது நல்லது, அக்குடும்பத்தில் ஒட்டுமொத்தமாக அனைவருக்கும் எது நல்லது என்பதை அனைவரும் பூரணமாக உணரச் செய்தாலே இத்தகைய நிலைமை ஏற்படும். பேச்சால் மட்டுமின்றி, பிரத்தியட்ச உதாரணத்தால் ஒவ்வோர் ஆன்மாவும் இதை மற்ற ஆன்மாக்களுக்குப் பரப்ப வேண்டும்.

இதனை ஒரு வாழ்க்கைப் பிரச்னையாகக் கருதி, மனப்பூர்வமாக உழைக்கும் ஆண்களையும் பெண்களையும் சுதந்திரக்கட்சி கவர்ந்து இழுக்க வேண்டியதே அவசியம். இல்லாவிடில் நாம் ஆண்டுக்கணக்காகப் பேசிக் கொண்டிருந்தாலும், பக்கம் பக்கமாக எழுதித் தள்ளினாலும் நாட்டின் நிலைமையை மாற்ற முடியாது. ஸ்தாபனத்தின் பலத்தைக் கொண்டே கட்சி வாழ்ந்து விடலாம். ஆயினும் அந்த வாழ்வு பயனுள்ளதாக இருக்க வேண்டுமாயின் ஆன்ம சமர்ப்பண உணர்வு பெற்ற தரமான மனிதர்களைக் கட்சி கவர்ந்திழுக்க வேண்டும். இதற்கு அனைவரின் ஒத்துழைப்பும் தேவை. கட்சியின் அங்கத்தினர் ஒவ்வொருவரும் நன்னடத்தையுடன் ஒழுகினால்தான் அக்கட்சியிடம் மக்களுக்கு விசுவாசம் ஏற்பட்டு அதனுடன் ஒத்துழைப்பார்கள். அரசியல் அதிகாரம் பெறுவதிலேயே அக்கறை காட்டும் கட்சியால் மக்களின் விசுவாசத்தைப் பெற முடியாது. அந்தரங்கசுத்தத்துடனும் பொறுமையுடனும் பணிபுரிந்தோமாயின் மக்களிடம் உயர்ந்த பண்புகளில் நாட்டத்தையும் நம்பிக்கைகளையும் உண்டாக்க முடியும்; தொழில்துறை நிர்வாகிகளை உதாரண புருஷர்களாக்க முடியும். இவ்வாறு உற்பத்தியில் ஈடுபட்டுள்ள சாரார்களைச் சகோதரர்களாக்கும் பணியில் வெற்றி காண்பதை நமது முக்கியத் தொண்டாகக் கருத வேண்டும்.

"ஒரு புரட்சியே அல்லவா நடைபெற வேண்டுமென விரும்புகிறீர்கள்?'' என்று என்னைக் கேட்பீர்கள். ஆம், ஒரு புரட்சிதான் நடக்க வேண்டும். இது போன்ற புரட்சிதான் நாட்டு வாழ்வை முற்றிலும் மாற்றுமேயன்றி ஊதிய போர்டுகளோ, மத்தியஸ்தத் தீர்ப்புக்களோ அல்ல. தொழிலதிபர்கள் வெறும் லாபநோக்கத்தை மட்டும் கருதாமல், ஊழியர்களிடம் அன்பும் பாசமும் காட்டி, அவர்கள் தனியாகப் பிரிந்திருக்கும் நிலைமையை மாற்றி, அவர்களும் தங்களோடு நட்பில் இணையுமாறு செய்கிற மனப்பான்மையைப் பெற வேண்டும். இம் மனப்பான்மையைத் தோற்றுவிக்கச் சுதந்திரக்கட்சி இடையறாமல் முயற்சி செய்ய வேண்டும். ஊழியர் ஒருவர் முறிவில்லாமல் சுமார் ஐந்து ஆண்டுகள் ஒரு நிறுவனத்தில் பணி புரிந்தால் அவர் ஒரு பங்குதாரரின் அந்தஸ்து பெற்று, அதற்குரிய சலுகைகளும் லாபமும் பெறுவதற்கு உரிமை பெற வேண்டும். இதே போல் முறிவில்லாமல் பணிபுரிகிற ஒவ்வொரு கால கட்டத்துக்கும் வெகுமதியாக அதிகப்படி சலுகைகள் வழங்க வேண்டும். இது நிறுவனத்தின் செலவை அதிகரிக்கும் ஓர் அம்சம்



**காமகோடியின் கருணைமொழி**

இருப்பது ஒரே ஒரு சூரியன்தான். ஆனால் கையிலே கொஞ்சம் ஜலத்தை எடுத்துக்கொண்டு நல்ல வழுவழுப்பான தரையில் தெளித்தால் ஒவ்வொரு முத்து ஜலத்திலும் பிரதிபிம்பமாக ஒரு சூரியன் தெரிகிறது. பிரிந்து பிரிந்து இப்படிப் பல பிரதிபிம்ப சூரியன்கள் இருந்தாலும் உண்மையில் இருப்பது ஒரு சூரியன் தான். இப்படியே எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கும் ஒரே சக்திதான் நம்மெல்லோரிடமும் பிரிந்து பிரிந்து பல போல் தோன்றுகிறது.

என்று கருதாமல், நிறுவனத்தின் சாதனைக்கு ஒரு நிருபணம் என்று கருதும் மனப்பான்மையை நிருவாகிகள் பெற வேண்டும்.

தேச பக்தி போல, நிறுவன பக்தி என்ற ஒன்று முதலாளிகள், நிருவாகத்தினர், தொழிலாளர்கள் அனைவரிடமும் ஏற்படுவதற்கு முயல வேண்டும். தொழில் துறையில் ஈடுபட்டுள்ள அனைவரும் பெருமித உணர்வுடன் ஒன்றுபட வேண்டும். ''நம் நிறுவன வளர்ச்சியே நமது இன்பம்'' என்பது தொழில்துறையில் அனைவருக்கும் 'ஜனகண மன'வாக விளங்க வேண்டும். ஒவ்வொரு நிறுவனத்திலுமுள்ள சகல அங்கத்தினரும் அவ்வப்போது ஒன்றுகூடி வெற்றிக்கு வழிகளைத் தேட வேண்டும். இதுபோல் அவ்வப்போது ஒன்று சேருவதே உழைப்பின் சலிப்பைக் குறைக்க உதவும். ஒரு நிறுவனம் காண்கிற லாபம் அதில் பணி புரியும் அனைவருக்கும் பகிரங்கமான விஷயமாக இருக்கவேண்டும். முதலாளிகள் தொழிலாளர்கள் ஆகிய இரு சாராரும் அடங்கிய குடும்பம் முழுவதற்குமே உரிய சுபிட்ச நிதிதான் லாபம் என்ற உணர்வு பிறக்க வேண்டும். காந்திஜி கூறிய சோஷலிஸம் வெறும் சொற்றொடராக இல்லாமல் நன்கு உணரப்பட்ட உண்மையாக வேண்டும். 'ஜனநாயக சோஷலிஸம்' என்று தற்போது சொல்லப்படுவது வேறு; காந்திய சோஷலிஸத் திட்டம் வேறு. மத்திய திட்டத்துக்குத் தேவைப்படும் நிதி கிடைக்காமல் அது தோல்வியுறும்போது 'ஜனநாயக சோஷலிஸ'த்தை முழக்குகிறார்கள். காந்திய சோஷலிஸம் என்பது ஹிந்து அவிபக்த குடும்பம் போல் நிர்வாகிகளையும் ஊழியர்களையும் பந்தப்படுத்தும் தத்துவம்.

தேர்தல்களில் அபேட்சகர்களை நிறுத்தி வைத்து வெற்றி காண்பதற்காகப் பணம் தேடுவதோடு சுதந்திரக் கட்சி நின்றுவிடவில்லை. கட்சி அங்கத்தினர்களைவிட, தொழில் துறைத் தலைவர்களிடமிருந்து உத்தமமான உதாரணம் கிடைப்பதே இன்றைய தேவை. தேச வாழ்வின் சீரமைப்பில் முதல் நடவடிக்கை தொழில் துறைத் தலைவர்களிடமிருந்து வரவேண்டும். இதுவரை தொழிலாளர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகவே இருந்திருக்கிறார்கள். அவர்கள் தவறான வழியில் அழைத்துச் செல்லப்பட்டு மாயப் பிரமைக்கு ஆளாகியுள்ளனர். இப்போது தொழில் துறையில் ஒரு புரட்சிகரமான, தீரமான மாறுதல் நடந்தாக வேண்டும்.

அதிகாரத்தைத் தேடி ஓடுவதில் சக்தியை விரயம் செய்யாதிருப்போம்; தேசத்தின் தேவையை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு செயல் புரிந்தோமாயின், அதிகாரம் நம்மைத் தேடி, நம் பின்னால் ஓடிவரும். தொழிலதிபர்கள் முதலடி எடுத்து வைத்து மேற்சொன்ன காரியங்களைச் செய்வாராயின் கம்யூனிஸ்டுகளும், காங்கிரஸ்காரர்களும், மற்றவர்களும் செய்கிற சூதுக்கள் யாவும் அழிந்து போகும். தொழிலதிபர்களின் இந்த முதல் நடவடிக்கைக்கு மகாத்மாவின் ஆசியும் கிடைக்கும்.

(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)

# 'நாரதர்' சீநிவாச ராவ்

நம்ப முடியாத விஷயங்களில் ஒன்று நாரதர் சீநிவாசராவ் அவர்களுக்கு இந்த ஜூன் 25ல் அறுபது வயது பூர்த்தியாகிறது என்பது. அவர் முப்பது வருடங்களுக்கு முன்பு எப்படித் துருதுரு என்றிருந்தாரோ அப்படியேதான் இன்னும் இருக்கிறார். திருநெல்வேலி சேரன்மாதேவியில் பிறந்து பி. ஏ. பட்டம் பெற்ற சீநிவாசராவ் அவர்கள் 1931லேயே பத்திரிகையுலகில் புகுந்து விட்டார். விகடக் கடல், தேச பக்தன், முரசு முதலிய பத்திரிகைகளில் பணியாற்றி விட்டு 1933ல் ஆனந்த விகடனில் சேர்ந்தார். அதே ஆண்டு நவம்பரில் நாரதர் தொடங்கப் பெற்றது. அதன் ஆசிரியர் பணி இவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அதிலிருந்து வெறும் சீநிவாசராவ் நாரதர் சீநிவாசராவ் ஆனார். நாரதர் கலைத் துறையில் செய்துள்ள சேவை மிகப் பெரிது. எந்த அமெச்சூர் நடிகரையும் நடிகையையும் நாலு நல்ல வார்த்தைகள் சொல்லிப் படத்துடன் ஊக்கிவிடுவதைத் தமது பத்திரிகை தர்மமாகக் கொண்டிருந்தார். இம்முறையில் கலையுலகில் சங்கீதம், சினிமா, நாடகம் ஆகிய எல்லாத் துறைகளிலும் அவருக்கு மிகுந்த செல்வாக்கு ஏற்பட்டது. அவர் காமிரா பிடிக்காத விழாக் கிடையாது. அவர் புகைப்படங்கள் எடுப்பதில் மிக சமர்த்தர். போட்டோ அடியில் ''ராவுஜி'' என்று போட்டிருக்கிறதா என்று எந்த நல்ல படத்தைக் கண்டாலும் மக்கள் பார்ப்பதுண்டு!



சினிமா உலகில் புழங்கினாலும் அவர் மிகுந்த ஆசார சீலர். கலையுலகில் அவ்வப்போது நடக்கும் தேநீர், விருந்து முதலியவற்றுக்கு வருவார். கையை ஈரங்கூடச் செய்து கொள்ள மாட்டார். கலையுலகில் புகுந்த ஒருவர் எப்படி இவ்வளவு நியமங்களைக் காக்கிறார் என்பது வியப்பாக இருக்கும். ஆனாலும் அது உண்மை. அதனால் தான் அவர் முருகனைப்போல், ''என்றும் இளையாய்'' என்றிருக்கிறார். இந்த இளமை குன்றாது இன்னும் பல்லாண்டு வாழத் தமிழ்க் கடவுள் அருளுமாறு பிரார்த்திக்கிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஆளும் கட்சியின் உள்விவகாரங்களைப் பற்றி எதிர்க்கட்சித் தலைவர்கள் மிகையான அக்கறை காட்டுகிறார்கள். தங்களது கட்சியைப் பலப்படுத்திக் கொள்வதைவிடக் காங்கிரஸுக்குள் இருக்கும் — அல்லது இருப்பதாக நினைக்கப்படும் — பிளவுகளைக் குறித்து இவர்கள் அதிக கவனம் செலுத்துகிறார்கள். காங்கிரஸின் ஆட்சிதான் தில்லியில் சாசுவதமாக நடக்கும் என்ற எண்ணத்தில் அக்கட்சி நடத்தும் சர்க்காரை உண்ணிகள் போல் பிடிப்பதிலேயே எதிர்க்கட்சிக் கோஷ்டிகள் திருப்தியடைவதாகத் தோன்றுகிறது. தேச வாழ்வில் தமது உண்மையான பங்கை அவை மறந்து விடுகின்றன.

ஃஃஃ

" ஜூன் 10ந் தேதி 'ஹிந்து'வில் வெளியாகியுள்ள அடியிற் கண்ட செய்தியை என் ஆமோதிப்புடன் வெளியிடுகிறேன் :

கல்வி என்பது தனிமனிதனின் முன்னேற்றத்துக்கு மட்டும் ஏணியல்ல; சமுதாயம் அனைத்தின் முன்னேற்றத்துக்குமே கல்விதான் ஏணி. எனவே, மாணவர்களுக்கு அநாவசியமான தடங்கல்கள் ஏற்படுத்தி முன்னேற்றத்தைப் பின்வாங்கச் செய்யும் 'சீர்திருத்தங்களை' மேற்கொள்ளுவது மிகவும் அவிவேகமாகும். கல்லூரி மட்டத்தில் தமிழை ஒரு போதனை மொழியாக்குவதற்கு ஆட்சேபணை இருக்க முடியாது. ஆனால் ஆங்கிலத்தைப் போதனை மொழியாகத் தேர்வு செய்யவொட்டாமல் தமிழைக் கட்டாயமாக்குதல் கூடாது. ஆயினும், இது தான் (தமிழக) சர்க்காரின் கொள்கை என்பது ராஜ்யத்திலுள்ள 19 அரசாங்கக் கல்லூரிகளைப் பார்க்கையில் தெரிகிறது.

ஃஃஃ

அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்தில் இந்தியா சேராமல் இருப்பதை ஸோவியத் சர்க்கார் பத்திரிகையான **'இஸ்வெஸ்தியா'** கண்டனம் செய்திருக்கிறது. அமெரிக்கா மட்டுமே வாதம் புரிகையில் இந்தியாவுக்குச் சந்தேகங்கள் இருக்கலாம். ஆனால் இப்போது ஸோவியத் சர்க்காரும் இந்தியக் கொள்கையை ஆமோதிக்காததால், அமெரிக்கா — ருஷியா இரண்டும் வகுத்துள்ள அணு ஆயுதப் பரவலைத் தடுக்கும் ஒப்பந்தத்துக்கு இனியேனும் இந்தியா ஆதரவு தர வேண்டும்.

ஃஃஃ

ராபர்ட் கென்னடியைக் கொன்றதாக விசாரணை செய்யப்படவிருக்கும் இளைஞர் ஸிர்ஹான், ப்ளவாட்ஸ்கி எழுதிய 'இரகசிய தத்துவம்' (Secret Doctrine) லீட்பீடர் எழுதிய 'குருநாதன் காலடியில்' (At the Feet of the Master) ஆகிய நூல்களைத் தாம் படித்துப் பார்ப்பதற்காகக் கேட்டாராம். இதனால் தியாஸாஃபிகல் சொஸைடிக்காரர்கள் வெளியிட்டுள்ள இந்தப் புத்தகங்களின் மதிப்பு குறைந்ததாக ஆகாது. இப்புத்தகங்கள் கொலையைத் தூண்டிவிடவோ, கொலைக்கு ஆதரவளிக்கவோ இல்லை என்பது நிச்சயம்.

ஜனாதிபதி ஜான் கென்னடியின் கொலை பற்றிய உண்மை வெளியாகாமல் மறைப்பதற்கே சதி செய்து ராபர்ட் கென்னடி கொலை செய்யப்பட்டிருக்கக்கூடும் என்று இரும்புத் திரைக்குப் பின்னால் உள்ள ஒரு பத்திரிகை 'அதி சாதுரியமாக'க் குறிப்புக் காட்டியுள்ளது. இது விசித்திரமான கற்பனை என்பதோடு அயோக்கியத்தனமுமாகும். சில பெரிய மனிதர்கள் ஜனாதிபதி கென்னடியின் கொலைக் குற்றத்தில் ஈடுபட்டதாகவும் அது பகிரங்கமாகாதிருப்பதற்காக ராபர்ட் கென்னடி கொலை செய்யப்பட்டதாகவும் இதற்கு உட்பொருள். இது யுக்தமல்ல.

தன் தாய்நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கப்பட்டதாக நினைத்த ஓர் இளைஞன் பெரியதாக எதையோ செய்ய வேண்டும் என்ற வெறியில் செய்த காரியமே இக்கொலை என்பது வெளிப்படை. அப்படி ஏதேனும் சதித்திட்டம் இருக்குமாயின் அது இந்த இளைஞனைப் போன்ற மனப்போக்கைப் படைத்த இளைஞர்களின் சூழ்ச்சியாகத்தான் இருக்கும்.

இப்போது ஒரு வேளை ஸிர்ஹான், தான் மரண தண்டனை பெற்றால் அதன்பின் மறு பிறப்பு எடுக்க நேரலாம் என்று நினைத்து அது காரணமாக ப்ளவாட்ஸ்கியின் புத்தகத்தை ஆறுதலுக்குப் படிக்க விரும்புகிறான் போலும் !

உண்மைப் பிரச்னை, பெரிய ஸ்தானத்தில் சில கெட்டவர்கள் இருப்பதாக நினைத்து அவர்களின் பயங்கரச் சதியைப் பகிரங்கப்படுத்துவதல்ல; அமெரிக்காவிலும்—மற்றெங்கிலுமே — உள்ள இளைஞர்கள் யுவதிகள் ஆகியோரின் கல்வி முறையைச் சீரமைப்பதே உண்மைப் பிரச்னை. இளைஞர் வாழ்வில் எதை ஒதுக்க வேண்டும் என்று முடிவு செய்வதே முக்கியம். எதை ஒதுக்கக் கூடாதோ அதை ஒதுக்கி விட்டோம் — புராணங்கள் கூறும் தீரக் கதைகளை ஒதுக்கி விட்டோம். மனத்தைக் கெடுக்கும் கட்டுக் கதைகளுக்குப் பூரண சுதந்திரம் தந்து விட்டோம்.

ஃஃஃ

நாடெங்கிலும் பல சேனைகள் முளைத்து வருகின்றன. அவைகளில் சில முற்றிலும் ஆக்கிரமிப்புத் தன்மை பெற்றவை. ஆனால் பெரும்பாலானவை ஆக்கிரமிப்பை எதிர்த்துத் தற்காப்புச் செய்து கொள்ளவே நிறுவப்பட்டவை. சர்க்கார் அதிகாரிகள் தமது கடமையைச் செலுத்தத் தவறியதற்கே இந்தத் தற்காப்பு ஓர் அறிகுறியாகும். வழக்கமான கடமையைச் செய்வதற்குக்கூட மந்திரிகளின் உத்தரவைப் பெறுவது என்கிற புதுக் கொள்கை காரணமாகவே அதிகாரிகள் தம் கடமையைத் தாமாகவே ஆற்றத் தயங்குகிறார்கள். ஜனநாயகம் என்ன என்று புரிந்து கொள்ளாததன் தவறுதலான விளைவே இம்மாதிரி கடமையைச் செய்யக்கூட மந்திரியை எதிர்பார்ப்பது.

சிறந்த ஜனநாயக அமைப்பில் மந்திரிகள் பொதுக் கொள்கைகளை மட்டும் முடிவு செய்துவிட்டு, அவற்றைச் செயலாக்கும் பொறுப்பை அதிகாரிகளிடம் விட்டுவிட வேண்டும். எந்தச் சர்க்கார் வந்தாலும் போனாலும் அதிகாரிகள் நிரந்தரமானவர்கள். அவர்கள் எந்தத் தனிப்பட்ட கட்சியையும் ஆதரிக்காதவர்கள். நிலையான

சட்டத்தையும் சம்பிரதாயத்தையும் அநுசரித்துச் செயல் புரிபவர்களே அதிகாரிகள். இவர்களின் அன்றாட நிருவாகத்தில் தலையிட்டு, அதிகார இயந்திரத்தைக் கட்சி நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ள நினைப்பது தவறாகும். எனினும், இந்தியாவிலோ மத்தியிலும் ராஜ்யங்களிலும் இந்தத் தவறான போக்கைக் காண்கிறோம். அதிகாரிகள்மீது ஆதிக்கம் செலுத்துவதற்கும், தமக்கு வேண்டியவர்களுக்குச் சலுகைகள் பெற்றுத் தருவதற்கும் வசதியில்லாத பட்சத்தில் தேர்தலில் வெற்றி பெறுவதில் பயனே இல்லை என்று நினைக்கும் அரசியல்வாதிகளும் இருக்கிறார்கள். சட்டசபை ஜனநாயகத்தைப் பற்றிய இத்தவறான எண்ணத்தைத் திருத்தக் கட்சித் தலைவர்கள் கவலைப்படுவதாகத் தெரியவில்லை.

ஃஃஃ

நில உடைமைகளைச் சிறு சிறு துண்டுகளாக்கி, உச்ச வரம்பு விதித்து, அதன் மூலம் ஏழை விவசாயிகளின் வாழ் நிலையை அபிவிருத்தி செய்ய முயலுவது பற்றி உலகப் புகழ் பெற்ற சோஷலிஸ்டான ஸ்ரீ குன்னார் மிர்டல் சமீபத்தில் ஒரு நூலில் குறிப்பிட்டுள்ளார். முதலாளித்துவ அடிப்படையில் நிலவுடைமைகளை விஸ்தாரமாக்குவதே விவசாய உற்பத்திக்குச் சாலச் சிறந்தது என்று அவர் யோசனை கூறுகிறார். ஆயினும் நம் நாட்டில் நிலத்தைத் துண்டாக்கும் விஷமம் ஏற்கனவே பெருமளவுக்குச் செயலாகிவிட்டது. இனி அதை மாற்றி அமைப்பது கடினம். விவசாயிகள் தகுந்த தலைமையை இழந்துவிட்டனர். காங்கிரசின் நாசத் திட்டத்தால் விவசாயிகளுக்கு நிதி உதவி புரிபவர்களும் இல்லாமற்போய்விட்டனர். நேராக பாங்குகளையும் விவசாயிகளையும் பிணைத்துவிடலாம் என்று ஸ்ரீ மொரார்ஜி தேசாய் நம்புகிறார். ஆனால் இது சாத்தியமானதல்ல. ஏதோ ஓர் அற்புதம் நடந்து , பாங்குகள் விவசாயிகளுக்குக் கடன் தருமாறு நிர்ப்பந்திக்கப்பட்டாலும் பாங்கில் பணம் போட்டவர்கள் நஷ்டப்பட வேண்டியதுதான். கடன் உதவி என்பது கற்பனையின் இழுப்புக்கு ஈடு கொடுக்க முடியாது. இதுபோன்ற பரிசோதனைகளின் நஷ்டத்தை வரி கொடுக்கும் மக்களனைவரும் சுமக்க வேண்டியதாகும்.

ஃஃஃ

அநுபவம் வாய்ந்த பத்திரிகையாளர் ஸ்ரீ ஈசுவர தத் பல நெடுங்கால நண்பர்களையும், சகாக்களையும் துயரத்தில் ஆழ்த்திவிட்டு, ஜூன் 9ந் தேதி காலமாகி விட்டார். வேகமாகச் சுருங்கி வருகிற பழைய தலைமுறையைச் சேர்ந்தவர் அவர். காந்தியப் புரட்சியால் நியாயமற்ற முறையில் பல பெரும் தீரர்கள் இருட்டடிப்புக்கு ஆளாயினர். தேஜ்பஹதூர் சாப்ரு, சிந்தாமணி-மற்றும் பலர் இக்கோஷ்டியில் சேர்ந்தவர்கள். அவர்களது ஆற்றல்களையும், பணிகளையும் பாராட்டி எழுதியதே ஈசுவர தத் இந்திய அரசியல் இலக்கியத்துக்கு ஆற்றிய பங்காகும். மதிப்பு மிகுந்த பல நூல்கள் எழுதியவர் அவர். பல்லாண்டுகளாக அவரது அன்பையும் விசுவாசத்தையும் பெற்று மகிழ்ந்து வந்தேன். அதை நன்றியுடன் நினைவுகொள்கிறேன்.

---

பள்ளிக்கூடங்கள் சீக்கிரம் திறக்கப் போகின்றன. ஒரு மாணவனின் மனத்தில், அவன் விலைக்கு வாங்கவேண்டிய புத்தகங்களும், நோட்டுகளும், பேனாவும் விசுவரூபமாக அளிக்கும் ஒரு காட்சிதான் இந்தப் படம். படம் அனுப்பியவர்: டாக்டர் எஸ். பரமசிவன்



# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

(ஸ்தாபிதம் : 6-1-1947)




பதிவுசெய்யப்பட்ட அலுவலகம் :
திருநெல்வேலி - 6 போன் : 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும் :
61 - B, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை -17
போன் : 444532

31-3-68ல் (ஆடிட்டுக்குட்பட்டது) அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம் மொத்த ஆஸ்திகள் ரூ. 1.52 கோடி. சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 3 கோடி.

---

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனிகள், டிபார்ட்மெண்ட் 29-10-66-ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBC 1/ED (S) 66/- பாரா 2 (1) (f)ன் ஸப்கிளாஸ் (x)ன் படி.

## காரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது

| தவணை | வட்டி விகிதம் ரூ. 300-லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000க்கு மேல் |
|---|---|---|
| ஒரு வருடம் | $8\frac{1}{2}\%$ | 9% |
| இரண்டு வருடம் | 9% | $9\frac{1}{2}\%$ |

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி செக்குகள் அனுப்பப்படுகின்றன. அவைகளை எங்கள் எந்தக் கிளையிலும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

### தொழில் விவரம்

பிரதி மாதம், மாதம் மும்முறை, தினசரி உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல், ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்கள் 26 ஆபீஸ்களில் நடத்தப்படுகின்றன.

அலுவலக நிர்வாகம் :

மானேஜிங் டைரக்டர் :
ஸ்ரீ AR. ராமசாமி

டைரக்டர்கள் :
ஸ்ரீ M. A. M. கோவிந்தன் செட்டியார்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி

மத்திய அலுவலக மானேஜர் :
ஸ்ரீ K. A. ராம், பி.ஏ., பி.எல்.

---

கடந்த மூன்று வருடங்களில் ஆதாயமும், டிவிடெண்டு விவரமும் :

| வருடம் | வரி கொடுப்பதற்கு முன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்டு விகிதம் |
|---|---|---|---|
| 1964 - 65 | 41825 - 20 | 14295 - 70 | 12% |
| 1965 - 66 | 61908 - 72 | 25170 - 72 | 13% |
| 1966 - 67 | 79686 - 41 | 27686 - 41 | 16% |

பொறுப்புகள் : 31-3-1967

| | | |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. | 1,02,966 |
| ரிசர்வ் நிதி | ரூ. | 31,458 |
| பிக்ஸட் டிபாஸிட்டுகள் | ரூ. | 7,80,364 |
| ஷேர் ஹோல்டர்ஸ் டிபாஸிட்டுகள் : | ரூ. | 1,00,500 |
| காரண்டீட் செய்த லோன்ஸ் | ரூ. | 1,69,275 |
| தாற்காலிகக் கடன் | ரூ. | 70,156 |
| சீட்டு, இதர பொறுப்பு வகைகள் | | 1,10,83,428 |
| மொத்தம் : | ரூ. | 1,23,38,147 |

---

புதிய M. குரூப் ரூ. 25,000 மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 12 கிலேதார் தெரு, திருச்சி (போன் : 4276) லும், 43, விஸ்வநாதராவ் ரோடு, மாதவநகர், பெங்களூர்-1, (போன் : 75955)லும் நடைபெறும்.

ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படுகின்றன

அனுமதித்த தேதி : 21 - 5 - 1968

AR. ராமஸ்வாமி, மானேஜிங் டைரக்டர்

Paramount

பத்திரிகை வாயிலாகச் சினிமாத் துறைக்கு இருபத்தைந்து வருஷங்கள் சேவை செய்த 'ஜாம்பவா'னுக்குத் தமிழக அமைச்சர் திருமதி சத்தியவாணிமுத்து பதக்கம் வழங்குகிறார்.





மலேஷியாவில் முதல் உலகத் தமிழ் மகாநாட்டை நடத்திய நிர்வாகிகளுக்குக் கொழும்பு சரஸ்வதி ஹாலில் ஒரு தேநீர் விருந்து சமீபத்தில் சிறப்பாக நடைபெற்றது. பேராசிரியர் தனிநாயகம், திரு வி. செல்வநாயகம் ஆகியவர்களோடு செட்டியார் வர்த்தக சபையின் தலைவர் திரு பழனியப்ப செட்டியார் உரையாடுகிறார்.







முன்னாள் பம்பாய் மேயர் திரு மாதவன் தலைமையில் குமாரி இந்திராணியின் நடன அரங்கேற்றம் பம்பாய் போதார் கல்லூரி அரங்கில் நடைபெற்றது.

---

பிரான்மலையில் நடந்த வள்ளல் பாரி விழாவின் போது குன்றக்குடி அடிகளார் திருவாசகமணிக்கு 'அருங்கலைக்கோன்' என்ற பட்டத்தை வழங்கிப் பொன்னாடை போர்த்துகிறார்.

---

மேற்கு மாம்பலம்வாழ் மக்களுக்கு ஒரு புதிய சங்கீத சபையான 'லலித கலாநிகேத'னைச் சென்ற 12 - 5 - 68 அன்று முன்னாள் முதலமைச்சர் திரு எம். பக்தவத்சலம் தலைமையில் வீணை வித்வான் திரு எஸ். பாலசந்தர் தொடங்கி வைத்தார். அன்று திரு பால முரளி கிருஷ்ணாவின் இன்னிசைக் கச்சேரியுடன் லலித கலாநிகேதன் ஆரம்பமாயிற்று.

ஆயிரமாயிரம் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட

# பொன்னியின் செல்வன்



அமரர் **கல்கி**யின்

மகோன்னதப் படைப்பு

ஆகஸ்ட் 4ல் **கல்கி** இதழில்

ஆரம்பமாகிறது

# மீண்டும் நெருப்பா......?

சென்ற ஆண்டு, ஏறத்தாழ இதே காலத்தில் தென் சென்னையில் புகைந்து அமளி செய்த தீ இந்த ஆண்டு வடசென்னை விளிம்பில் தன் கைவரிசையைக் காட்டியிருக்கிறது. வியாசர்பாடியை ஒட்டிய பகுதிகளில் நூற்றுக் கணக்கான குடிசைகள் அவற்றைத் தாங்கியிருந்த மண் சுவர்களுக்குக் கரி பூசிவிட்டுக் காற்றிலே சாம்பலாகப் பறந்திருக்கின்றன. அவைகளில் வசிப்பவர்களின் உள்ளங்கள் வேதனையால் உருகியதைவிடப் பன்மடங்கு வேகத்தில், அந்தக் குடிசையில் சிக்கிய பல பண்டங்கள் உருகி ஓடியிருக்கின்றன. தகர டப்பாக்களில், சிறுகச் சிறுகச் சேமித்து வைக்கப்பட்டிருந்த கரென்சி நோட்டுக்கள் சாம்பலாக மாறிவிட்டிருக்கின்றன. மாற்றிக் கட்ட வேட்டி சட்டை" இல்லாமல் சர்வ உடைமைகளையும் பறிகொடுத்த சில குடிசைவாசிகள் மனமுடைந்து நகரசபை கவுன்சிலரின் ஆபீஸ் வராந்தாவில் அடைக்கலம் புகுந்து தவிக்கும் காட்சி பார்ப்பவர் நெஞ்சங்களை உடைப்பதாக இருக்கிறதே!

''நாங்க ஒரு கல்யாணத்துக்கு வீட்டைப் பூட்டிக்கிட்டுப் போயிருந்தோம். கல்யாணம் முடிஞ்சு திரும்பி வந்துக்கிட்டு இருக்கிறப்போ பாதி வழியிலேயே, நாங்க இருக்கிற மோகன முதலி தோட்டத்திலே தீப்பத்திக்கிடுச்சுங்கிற சேதி வந்திருச்சு. ஓட்டமாக ஓடி வந்தோம். ஆனல் ஒண்ணும் பிரயோசனமில்லே. கம்ப்ளீட்டா எல்லாம் போயிருச்சு. என் கல்யாணத்தப்போ வாங்கின ஜரிகைப்





புடவையையும் அவரோட கல்யாண சூட்டை யும் இந்தப் பாழாய்ப் போன தீ பஸ்பமாக் கிடுச்சு ! நினைச்சாலே வயிற்றை எரியுது ! அது மாத்திரமா? ரேடியோ, என் புருஷ னுக்குக் கொடுத்த புது யூனிபாரம், மர பீரோ எல்லாம் போச்சுங்க. எல்லாம் ஒன்சப்புறமாகத்தான் எங்களாலே வீட்டுப் பக்கம் எட்டிப் பார்க்க முடிஞ்சது ! மாத்திக் கட்ட ஒரு துணி இல்லாமே இப்போ தெரு விலே நிற்கிறோம்'' என்றாள் ஸ்ரீமதி கௌரி. இவள் கணவர் ஸ்ரீநிவாசன் பாடியிலுள்ள ஒரு தொழிற்சாலையில் அலுவல் பார்ப்பவர்.

''என் மகன் ராமச்சந்திரன் இப்பத்தான் ஒரு மாசத்துக்கு முன்னாலே கடனை உடனை வாங்கி இருநூற்றி ஐம்பது ரூபாய் செல வழிச்சு வீட்டைப் புதுசாக்கிக் கூரை மாற்றி னான். இப்போ வீடே அடியோடே போயி டுச்சே!'' என்று பிரலாபித்தாள் கிழவி அன்னக்கிளி.

பட்டு அம்மா மகன் முனுசாமி அறுநூறு ரூபாய் பெறுமான மரப் பலகைகள் வாங்கி வைத்திருக்கிறார். ஆறு பைசாக்கூடப் பெறாத கரித் தூள்களாக அவை மாறி இருக்கின்றன. பட்டு அம்மாள் பத்திரமாக வைத்திருந்த சின்னஞ் சிறு தங்க நகைகள் உருகி உலர்ந்து கொஞ்சம் மிஞ்சியதாம்.

ஹைரோட்டில் நேஷனல் டீ ஸ்டால் நடத்தும் சையது, தம் வீட்டுப் பக்கத்தி லிருந்து புகை கிளம்புவதைக் கண்டு ஓடிப் போயிருக்கிறார். அவர் வீட்டுக்கு மூன்றாவது வீட்டில் கிளம்பிய தீ அவர் வீட்டுக்கும் பரவி விட்டது. அவரால் ஒன்றும் செய்ய முடிய வில்லை. நல்ல வேளை ! வீட்டில் ஆட்கள் இல்லை. அவருடைய மற்றொரு மூடப்பட்ட

ஹோட்டலின் தட்டுமுட்டுச் சாமான்கள் நிறைய இருந்திருக்கின்றன. அத்தனையும் தவிடு பொடி !

வீட்டுக்கும் கோயிலுக்கும் வித்தியாசமா தெரியும், நெருப்புக்கு? காளியம்மன் கோயிலையும் விட்டு வைக்கவில்லை. கான்கிரீட் சுவர்கள் மொட்டையாக நிற்கின்றன. நல்ல வேளை! மூலஸ்தானமும் கான்கிரீட் கூரையுடன் இருந்ததால் தேவி அலட்சியமாகத் தெருவைப் பார்த்து அமர்ந்திருக்கிறாள் !

இந்த மோகன முதலித் தோட்டம் உள்ள முப்பத்தி இரண்டாம் வட்ட கார்ப்பொரேஷன் கவுன்சிலர் அன்பிற்கரசனுக்கு, பொது மக்கள் கண்ட கண்ட இடங்களில் எந்தச் சட்டதிட்டங்களுக்கும் உட்படாமல் குடிசைகளைப் போட்டுக் கொள்வதன் மூலம் இப்படி அவதிக்குள்ளாவது பற்றி வெகு கோபம். அவர் கோபப்படுவதிலும் நியாயம் இருக்கிறது. இரண்டு பேர்கள் சேர்ந்தாற்போல் நடக்கக்கூட இடம் கொடுக்காமல், எதிரும் புதிருமாகக் குடிசைகளைக் கட்டிக் கொண்டால், அவசர காலத்தில் எப்படிச் சாமான்களை அகற்ற முடியும்? எவ்விதம் தண்ணீரோ மணலோ கொண்டு வந்து நெருப்பை அணைக்க முடியும்? இது விஷயத்தில், சர்க்காரும், கார்ப்பொரேஷனும் தீவிரமான, கண்டிப்பான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்பது இவர் அபிப்பிராயம்.

''நாலு நாளா சாத்திக் கிடக்கிற வீட்டிலே விருந்துதானுங்க இங்கே தீ கிளம்பிடுச்சு ! எந்தப் பொம்பளையும் அஜாக்கிரதையாக அடுப்பு பத்தவைக்கலே! அங்கே ஆள் இருந்தா இல்லே இந்தக் கேள்விக்கு இடம்! இது முன்னேற்பாடாக நடத்தற காரியம்!'' என்றார் அன்பிற்கரசன்.

முதல் நாளும் முற்பகல் பதினொன்றரை மணிக்குத்தான் திரு வி. க. நகர் குடிசைப் பகுதியில் தீ பரவிற்று. இரண்டாவது நாளும் அதே நேரத்துக்குத்தான் மோகனமுதலித் தோட்டத்தில் புகையத் தொடங்கியது. திரு அன்பிற்கரசனுடன் பேசிக் கொண்டிருந்த போது மூன்றாவது நாளும், அதே நேரத்தில், திரு வி. க. நகர்ப் பகுதியில் மீண்டும் தீ பரவி நெருப்பணைக்கும் மோட்டார்கள் ஓடிவந்தன!

நெருப்பு என்ன டைம்டேபிள் போட்டுக் கொண்டு தோன்றுகிறதா என்ன ?

நெருப்பு விபத்து ஏற்பட்ட பகுதிகளைக் காண வந்த அமைச்சர் மதியழகனிடம், ''இந்தத் தொடர் நெருப்பு நவீனம் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டதற்கு அவர், ''நினைப்பது என்ன ? அதுதான் பார்க்கிறோமே! எனக்கும் நெருப்பைப் பார்க்க வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்திருப்பது போல் இப்போதுகூட அருகில் புகைகிறதே'' என்றார்.

ராயபுரம் தொழிற்சாலை ஒன்றில் பணி புரியும் துரை என்பவர் மாத்திரம் சற்று முன்யோசனையுடன் நடந்து கொண்டதால் தம் குடிசையைத் தப்ப வைத்துக் கொண்டார். அவருடைய அடுத்த வீட்டில் தீ பரவி விட்டது. இரண்டு வீட்டுக்கும் இடையே ஒரு சிறிய ஓலைப் பந்தல். சட்டென்று பாய்ந்து அந்தப் பந்தலைப் பிடுங்கித் தள்ளி வீசிவிட்டார். காற்றும் நல்ல வேளையாக அந்த நேரத்தில் திசைமாறி வீசியது. அவர் வீடு பிழைத்தது.

மோகனமுதலித் தோட்டத்தில் தீ பரவத் தொடங்கிய போது, தம்மைப் பற்றிக் கொஞ்சம்கூடக் கவலைப்படாமல் பொது மக்களுக்கு உதவி செய்தவர் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் சின்னசாமி என்று பலர் சொன்னார்கள்.

கார்ப்பொரேஷன் ஆஸ்பத்திரிக் கட்டடத்திலும் பள்ளிகளிலும் குடியேறியிருக்கும் இந்த வீடிழந்து தவிப்போருக்குக் கார்ப்பொரேஷனும் சில தர்ம ஸ்தாபனங்களும் உணவு விநியோகிக்க ஏற்பாடு செய்திருக்கின்றன.

அஜாக்கிரதையினால் தீ விபத்துக்கள் எப்போதாவது நேர்வது அதிசயமல்ல. ஆனால் தொடர்ந்தாற்போல் தினம் பகல் வேளையில் வீடுகளில் உள்ள ஆண்பிள்ளைகள் எல்லாம் வேலைக்குப் போயிருக்கிற நேரத்தில், குழந்தைகளும், பெண்டிரும், வயோதிகர்களும் மாத்திரம் வீடுகளில் தங்கியிருக்கும் நேரத்தில், குறிப்பாகப் பதினொன்றரை மணி அளவில், தீ பரவுவதைச் சாமான்யமாக ஒதுக்கிவிட முடியாது !

தீயின் சக்தியை ஏதும் தீய சக்திகள் தூண்டிவிடுகின்றனவா? ஆயிரக்கணக்கான ஏழை மக்களைக் கணநேரத்தில் அநாதைகளாக்கி, கண்ணீரும் கம்பலையுமாய் நடுத் தெருவில் நிறுத்தி அவர்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதில் யார் ஆனந்தம் காண்கிறார்கள் ?

இந்த ஆண்டிலாவது இந்த மர்மத்தைத் துலக்கி உண்மையைக் கண்டுபிடிப்பதில் வெற்றி காண்போமா? - பட்டினத்தார்

# கடலும் குன்றிவிடும்!

மழையே பெய்யாமல் கடும் வெய்யில் காய்ந்து வறட்சி ஏற்படுமானால் பூமியை மட்டும் தான் அது பாதிக்கும் என்பதில்லை. கடலையும், கடல் வளத்தையும் அது பெரிதும் பாதிக்கும். அதனால் நாம் அடையும் பயனும் குன்றும்.

அட்டைப்படத்தில் காணும் மீனவர்கள் சோர்ந்துபோயிருக்கிறார்கள். ஆழ்கடலில் சென்று மீன் பிடித்து வரும் மீனவன் முகம் சோர்ந்து போயிருக்கிறது. இதைப் பார்க்கும் பொழுது நாம் காண்பது கடும் கோடைகாலத்துக் கடற்கரைக் காட்சி என்று நினைக்கத் தோன்றுகிறது. நல்ல மழை பெய்யாவிட்டால் கடலின் தன்மை தானே குன்றிவிடும் என்பதைத் திருவள்ளுவர் வெகு அழகாக எடுத்துக் கூறுகிறார்.

''நெடுங் கடலும் தன்னீர்மை குன்றும்
தடிந்தெழிலி தான்நல்கா தாகிவிடின்.''



# இலங்கைக் காட்சி.10

இன்று இலங்கையில் விவசாயத்துக்கு அளிக்கப்படும் முக்கியத்துவம் வேறு எந்தத் தொழிலுக்குமே கிடையாது. நாடு சுதந்திரம் பெற்றுப் பதினெட்டு ஆண்டுகளுக்கிடையில் கண்டும், கேட்டும் இராத அளவுக்குக் கடந்த இரண்டு ஆண்டுகளாக விவசாயம் அமோகமாக முன்னேற்றம் கண்டுள்ளது என்றால் அதற்குக் காரணம் உலக சந்தையில் அரிசிக்கு ஏற்பட்டுள்ள தட்டுப்பாடும், பிரதமர் திரு டட்லி சேன நாயகா அவர்களின் தளராத ஊக்கமும்தான். இதன் பயனாக இன்னும் இரண்டாண்டுகளுக்குள் இலங்கை தன் தேவையைத் தானே பூர்த்தி செய்து கொள்ளலாம் என எதிர்பார்க்கிறது.

அதிகமான மகசூல் கண்ட விவசாயிகள் பொதுக் கூட்டங்களில் மேடையேறி, ''விவசாய மன்னர்'' எனப் பட்டம் பெறுகின்றனர். இவ்விதம் பிரதம மந்திரியால் கௌரவிக்கப் படுவது இத்தொழிலுக்கு ஆக்கமும், ஊக்கமும் தருவதாக அமைகிறது. இலங்கைக்குப் பெரும் தொகையான கடன் உதவி அளிக்க உலக வங்கி உற்சாகத்துடன் முன்வர இந்த அபிவிருத்தியே காரணம்!

—கே. வி. எஸ். மோகன்

# விசித்திரமான விமான நிலையம்



உலகிலேயே மிகப் பெரிய விமான நிலையங்களில் நியூயார்க் பெரு நகரில் உள்ள இடில் வைல்ட் சர்வதேச விமான நிலையமும் ஒன்று. ஆனால் பிறநாட்டு விமான நிலையங்களுக்கும் இடில்வைல்டுக்கும் ஏ ரா ள மா ன வேற்றுமைகள் உண்டு. இடில்வைல்ட் விமான நிலையம் கட்டடக் கலையில் ஒரு மாபெரும் புரட்சியை ஏற்படுத்தியது. சான்றாக, அமெரிக்காவின் பிரபல கட்டடக் கலை வல்லுநரான ஈரோ ஸாரினன் என்பவரால் 'ட்வா' (TWA) நிறுவனத்துக்காக நிர்மாணிக்கப்பட்ட கட்டட வரிசைகளைக் குறிப்பிடலாம். பன்னிரண்டு கோடி ரூபாய்கள் பொருட் செலவில் ஒரு பறவையைப் போல் உருவாக்கப்பட்டுள்ளது இது. இந்த விமான நிலையத்தில் தான் மனிதர்களுக்கு மட்டுமின்றி ஆயிரக் கணக்கான மிருகங்களுக்கும் தங்க வசதிகள் உள்ளன. அமெரிக்காவிலிருந்து பிறநாடுகளுக்கு விமானமேறிச் செல்லும் அவற்றுக்காகத் தனி நிலையமே உள்ளது. இந்த ஏர்போர்ட்டுக்கு அனிமல் போர்ட் (Animal Port) என்று பெயர்.





அமெரிக்காவின் முப்பத்தைந்தாவது ஜனாதிபதியான காலஞ்சென்ற ஜான் பிட்ஜரால்ட் கென்னடியின் நினைவாக, இன்று ''ஜான் கென்னடி சர்வதேச விமான நிலையம்'' என்று அழைக்கப்படும் இடில்வைல்டில் 1958 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 12ம் நாளன்று 'மிருக நிலையம்' திறந்து வைக்கப்பட்டது. அத்திறப்பு விழாவில் கலந்து கொண்ட டினு லூஸி என்ற இத்தாலியக் கவர்ச்சி நடிகை மிருக நிலையத்தில் முதன் முதலாகத் தங்கும் பாக்கியம் பெற்ற ஒரு வெள்ளைக் குதிரைக் குட்டியைப் பிடித்துக் கொண்டு நின்றவாறே புகைப்படக்காரர்களுக்கு 'போஸ்' கொடுத்தார். அப்போது பெருநாட்டைச் சேர்ந்த 'லாமா' என்ற ஒரு மிருகம் நடிகையின் செந்நிறக் கூந்தலை மேய ஆரம்பித்தது. கூந்தலை லாமாவின் பற்களுக்கு இடையே பலி கொடுத்த அவர் அலற ஆரம்பிக்க அவர் பிடித்திருந்த வெள்ளைக் குதிரை மிரண்டு கனைத்துக் கொண்டே விமான நிலையத்தைச் சுற்றி ஓட ஆரம்பித்தது. இறுதியில் இந்தக் கண்ணராவிக் காட்சியைக் காணச் சகிக்காத புகைப்பட நிபுணர் ஒருவர் சோளப் பொரியை லாமா பக்கமாக நீட்டி நடிகையின் கூந்தலைக் காப்பாற்றினார்.

ஆரம்ப தினத்தன்றே இத்தகைய குதூகல நிகழ்ச்சியுடன் தொடங்கிய இந்த விசித்திர



கென்னடி விமான நிலையத்தின் உட்புறம்

விமான நிலையம் ஏற்படுவதற்குக் காரண கர்த்தா ஜார்ஜ் பாவர் என்பவர். அவரது பெரு முயற்சியாலும் அமெரிக்க மிருகக் கொடுமைத் தடுப்புக் கழகத்தின் ஆதரவாலும் நடத்தப்படும் இந்த 'மிருக நிலையத்தில்' அந்த நாள் முதல் இந்த நாள் வரையில் எத்தனையோ வேடிக்கையான நிகழ்ச்சிகள் நடந்துள்ளன.

ஒரு சமயம் ஜெர்மனியிலிருந்து விமான மூலம் நியூயார்க் வந்து சேர்ந்த ஒரு சிங்கத்தை அந்த நிலையத்தினுள் தங்க வைப்பதற்குள் பாவருக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. இரண்டு காவலர்கள் புடைசூழப் பாவர் அந்தச் சிங்கத்தை அழைத்துக் கொண்டு நிலையத்தின் உள்ளே ஓர் அறைக்குச் சென்றார். பாவரும் சிங்கமும் அறையுள் நுழைந்ததும் காவலர்கள் அறையை விட்டு வெளியேறி விட்டார்கள். அவர்கள் வெளியேறியதும் சிங்கம் பாவரை நோக்கி உறுமியது; கர்ஜித்தது; சீறியது. எப்பாடுபட்டாகிலும் சிங்கம் சுதந்திரம் பெற்று வெளியே





கென்னடி விமான நிலையத்தின் வெளித் தோற்றம்

வர முயற்சி செய்கிறது என்பதை உணர்ந்த பாவர் செய்வதறியாமல் சில நிமிடங்கள் தடுமாறினார். "உதவி! உதவி!" என்று தொண்டை கிழியுமட்டும் கத்தினார். கணவனது கூக்குரலைக் கேட்டு அடுத்த அறையிலிருந்த மனைவி ஹெலினாதான் ஓடி வந்தார். வேறு யாரும் வரவில்லை. தம்பதிகள் இருவரும் சிங்கத்தைச் சத்தம் போட்டு மிரட்டி ஒரு வழியாக உள்ளே வைத்துக் கதவைச் சாத்தினர். உள்ளே வசமாகச் சிக்கிக் கொண்ட சிங்கம் உறுமிக் கொண்டே சோப்புக் கரைத்திருந்த பெரிய நீர்த் தொட்டியைக் கீழே தள்ளியது. நுங்கும் நுரையுமாக இருந்த சோப்பு நீர் முழுதும் சிங்கத்தின் மேலேயே சிதறியது!

மற்றொரு சமயம் ஆப்பிரிக்காக் கண்டத்திலிருந்து ஓர் அமெரிக்க மிருகக்காட்சிச் சாலைக்கு இறக்குமதி செய்யப்பட்ட மனிதக் குரங்கு ஒன்று பாவரையும் அவரைச் சேர்ந்த சிலரையும் அலற வைத்தது. விமான நிலைய நிர்வாகிகள் குரங்குக்கு ஒருவேளை டி. பி. நோய் இருக்கலாம் என எண்ணி ஒரு மிருக வைத்தியரை அழைத்துக் குரங்கின் கண்ணிமை அருகே ஊசி போட்டுப் பரிசோதிக்கும்படி சொன்னார்கள். ஆறரை அடி உயரம் கொண்ட அந்தக் கொடூரமான குரங்கைக் கண்ட மிருக வைத்தியர் நடுங்கினார். நிர்வாகிகளை மனத்தில் சபித்துக் கொண்டே தாம் ஆற்ற வேண்டிய பணிக்குத் தயாரானார். பாவரும் அவரது மூன்று துணைவர்களும் குரங்கின் கால்களையும் கைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். ஊசியைக் குரங்கின் கண்ணருகே கொண்டு சென்றதும் அது பயங்கரமாகக் கத்தியது. அந்த அலறலைக் கேட்ட வைத்தியர் பயந்து போய் அந்த இடத்தை விட்டு ஓடியே விட்டார். குரங்கு தன்னை விடுவித்துக் கொண்டு



ஓட முயலுகையில் பாவர் பெரிய வலை வீசிக் குரங்கைப் பிடித்துத் தாமே ஊசி குத்தினார்.

இத்தனை சிரிப்பூட்டும் சங்கடங்கள் இருந்த போதிலும் மிருக நிலையம் சிறப்பாகவே நடந்து வருகிறது. மிருகக் காட்சிசாலைகளுக்காக வரவழைக்கப்படும் மிருகங்கள் மட்டுமின்றி விலை உயர்ந்த பந்தயக் குதிரைகள், யானைகள், லெமூர்கள், ஹைனாக்கள், பாண்டாக்கள், குரங்குகள், கரடிகள், ஓநாய்கள், காளைகள் முதலியவையும் இந்த நிலையத்தில் தங்கி உலகின் பல பாகங்களுக்கும் விமான மூலம் பயணமாகின்றன.

இந்த மிருகங்களைக் கவனிக்கும் நிலையத்தினுள் ஒரு பயிற்சிச் சாலை, மிருக வைத்திய சாலை, மிருகங்களுக்குத் தேவையான உணவு வகைகளைத் தயாரிக்கச் சமையலறை ஆகியவை உள்ளன. — அ. இராமதுரை

கொளுத்தும் கோடையில், இளநீர் எங்கே கிடைக்கும் என நாம் தேடுகிறோம். ஆனால் இளநீர்ப் பெரியவர் கண்ணாடி போட்டுக் கொண்டு யாரையோ தேடுகிறார்.

ஜெஸ்ட் என்ற ஆங்கில சஞ்சிகையிலிருந்து எடுத்து அனுப்பியவர்: க. குழந்தைநாதன்.

புருவங்கள் மேல்நோக்கி எழும்பிக் கண் பக்கமாக வளைந்து நிற்கும். கண்கள் மூடியே இருக்கும். வாய் திறந்து பற்கள் தெரியும். வாய் ஓரங்கள் பின்னுக்குப் போய் மேல் நோக்கி நிற்கும். கன்னங்கள் வீங்கியது போல் தோன்றும். சமயங்களில் இது கண்களையே மறைத்து விடும். முகம் சிவக்கும். மூக்கு துவாரங்கள் விரியும். கண்களில் சரிவு ஏற்படும். இது மனித குலத்துக்கு மட்டுமே, உங்களுக்கும் கூடத்தான் ஏற்படக்கூடியது. — இது எதன் அறிகுறி?

விடை: வியாதி ஒன்றுமில்லை. மனிதன் சிரிக்கும் போது அவன் முகத்தில் ஏற்படும் மாறுதல்களை இப்படி விவரிக்கிறது 'என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா'. - ஸாட்டர்டே ரெவ்யூ — தகவல் 'கென்னி'

பிரபல குத்துச் சண்டை வீரர் ஜோ லூயி என்பவரிடம், ''நீங்கள் போட்ட சண்டைகளில் உங்களை யார் அதிகமாகச் சிரமப்படுத்தி விட்டார்கள்?'' என்று கேட்டார் ஒரு பத்திரிகை நிருபர்.

''வருமான வரி அதிகாரி'' என்று அவர் பதில் அளித்தார்.

தகவல்: 'ரமன்'. ஆதாரம்: 'டைம்'

# நரைமயிர் கருநிறமடைய ...
# முதுமையிலும்
# இளமையுடன்
# விளங்க...

தூய கேசக்கருமைச் சாதனமாகிய

# வாஸ்மால்

உபயோகியுங்கள்

...ரைமயிர் வயதை அதிகரித்துக் காட்டுகிறது... தூய கேசக் ...ருமை சாதனமாகிய வாஸ்மால் உபயோகித்து நரையின் ...டையே இல்லாதபடி செய்துவிடுங்கள். தினந்தோறும் ...ஸ்மால் உபயோகித்து வந்தால் உங்கள் கேசம் மீண்டும் ...ழையபடி பளபளக்கும் கருநிறத்துடன் திகழும்... நீங்கள் ...கவும் இளமைத் தோற்றத்தையும், இளமை உணர்ச்சியை ...ம் பெறுவீர்கள்!

**உங்களுக்கு எத்தனை வயதானபோதிலும் வாஸ்மால் உபயோகித்து கேசத்தைக் கருமையாக வைத்துக்கொள்ளுங்கள்!**

[illegible] இன்ஸ்டிட்யூட், த. பெ. 1192, பம்பாய்-1






வாஸ்மால் கேசத்தைக் கருமையாக்கும் சாதனம் மட்டுமல்ல, ஒரு உன்னதமான கேசப் பராமரிப்புச் சாதனமுமாகும்... அது உங்கள் கேசத்தை, பரவசமூட்டும் நறுமணத்துடனும், எடுப்பாகவும் திகழச் செய்கிறது... நாள் முழுவதும் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது.

140 மற்றும் 450 கிராம் பாட்டில்களில் வாஸ்மால் எமல்ஸிஃபைட் ஹேர் ஆயில் குப்பியிலும் ஸ்டாண்டர்டு பேக்கிங்கில் வாஸ்மால் போமேடு குப்பியிலும் கிடைக்கிறது.

HALY.GJ TAM.



# மகாபாரதம்

ராஜாஜி

பரத்வாஜர் ஆசிரமத்தை நோக்கி வரும்போது யக்ஞசாலை வழக்கம் போல் ஜொலிக்கவில்லை. வாயிலில் குத்துண்டு உயிர் நீங்கிக் கிடக்கும் தம் மகனைப் பார்த்தார். ரைப்யரிடம் ஏதோ மரியாதை தப்பி நடந்துவிட்டு இந்தக் கதி அடைந்தான் என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டார்.

''ஐயோ! என் பிள்ளாய்! உன் கர்வத்தால் மாண்டாயா? பிராமணர் யாரும் ஓதாத வேதங்களை நீ வரமாகப் பெற்றது ஒரு பெருந் தவறல்லவே! நீ ஏன் இதற்காகச் சபிக்கப்பட்டாய்? என் ஒரே புத்திரனை நான் இழக்கச் செய்த அந்த ரைப்யர், அவருடைய இரு குமாரர்களில் ஒருவனால் கொல்லப்பட்டு மாள்வாராக'' என்று புத்திர சோகத்தினாலும் கோபாவேசத்தினாலும் விசாரியாமல் சாபமிட்டார்.

பிறகு உடனே தெளிவு அடைந்து, ''ஹா! புத்திரனைப் பெறாதவர்களே புண்ணியவான்கள். பெற்ற புத்திரனை நான் இழந்தேன். தோழனையும் சபித்தேன்! நான் உயிருடன் இருந்து என்ன பயன்?'' என்றார். மகனுடைய பிரேதத்தைத் தகனம் செய்து அந்தத் தீயில் தானும் புகுந்து உயிர் நீத்தார்.

## 35. படிப்பு மட்டும் போதாது

ரைப்ய ரிஷியினுடைய சிஷ்யன் பிருஹத்யும்னன் என்கிற அரசன் ஒரு பெரிய யாகம் செய்தான். அதை நடத்திக் கொடுக்கத் தன் ஆசிரியருடைய குமாரர்களாகிய பராவசு அர்வாவசு இருவர்களையும் அனுப்பும்படி அரசன் கேட்டுக் கொண்டான். பிதாவினுடைய அனுமதியைப் பெற்றுக் கொண்டு அவர்கள் இருவரும் மிகவும் மகிழ்ச்சியடைந்து அரசனுடைய நகரத்துக்குச் சென்றார்கள்.

சத்ர யாகத்திற்காக ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கையில் ஒரு நாள் பராவசு தன் மனைவியைப் பார்த்து வர விரும்பினான். இரவில் தனியாக நடந்து தன் ஆசிரமம் இருந்த வனத்திற்குப் பொழுது விடிவதற்குமுன் இருட்டிலேயே வந்து சேர்ந்தான். அப்போது அங்கே புதரண்டை தோலைப் போர்த்துக் கொண்டு இருட்டில் இருந்த ரைப்யரைக் கண்டு, காட்டு மிருகம் என்று எண்ணிப் பயந்து கையிலிருந்த ஆயுதத்தை வீசினான். அது அவரைக் கொன்றது.

பிறகு துக்கப்பட்டு இது 'பரத்வாஜர் இட்ட சாபத்தின் பயன் என்று தெரிந்து கொண்டான். பிதாவுக்குச் செய்ய வேண்டிய பிரேத காரியங்களை அவசர அவசரமாகச் செய்துவிட்டு அர்வாவசுவிடம் சென்று நடந்ததைச் சொன்னான். ''அரசனுடைய யாக காரியத்திற்குக் குந்தகம் ஏற்படக் கூடாது. தெரியாமல் தகப்பனைக் கொன்ற என் பிரம்மஹத்தி தோஷத்தை நீக்குவதற்குச் செய்ய வேண்டிய பிராயச்சித்த விரதத்தை நீ அனுசரித்து எனக்காக நடத்துவாயாக. கொல்ல வேண்டும் என்கிற எண்ணமில்லாமல் கொன்ற பாபத்திற்குப் பிராயச்சித்தம் உண்டு. எனக்காக நீ விரதம் இருந்து இதை நடத்திவிட்டாயானால், நான் ஒருவனே அரசனுடைய யாகத்தைக் குந்தகமின்றி முடித்து விடுகிறேன்'' என்றான். தர்மவானான தம்பி ஒப்புக் கொண்டு, ''அரசனுடைய சத்ர யாகத்தைச் சரிவர நீ நடத்திவிடு. அதற்கு என்னுடைய சாமர்த்தியம் போதாது. பிரம்மஹத்தி தோஷத்திற்கு நான் உனக்காகத் தவமிருந்து கடமை செலுத்துகிறேன்'' என்று சொல்லிவிட்டு வனம் சென்றான்.

அவ்வாறே தர்மாத்மாவான அர்வாவசு, அண்ணனுடைய பிரம்பஹத்தி தோஷத்தைத் தானே வகித்துக் கொண்டு பிராயச்சித்தம் செய்துவிட்டு, பிறகு சத்ர யாகத்திற்கு வந்து சேர்ந்தான்.

தானே பிராயச்சித்தம் செய்யாத படியால் பராவசுவின் பிரம்பஹத்தி தோஷம் நீங்கவில்லை. அது அவன் உள்ளத்தில் பாப எண்ணங்களை உண்டாக்கிக் கொண்டே இருந்தது. யாக சாலைக்குத் தம்பி வந்ததைப் பார்த்ததும் பராவசு அவன் மேல் பொறாமை கொண்டான். தம்பியின் முகத்தில் வீசிய பிரம்ம தேஜஸ்ஸானது அண்ணன் உள்ளத்தில் பொறாமையைக் கிளப்பிற்று. அவன் மேல் அக்கிரமமாக அபவாதம் சுமத்தி அவமானப் படுத்த நிச்சயித்தான்.

''பிரம்பஹத்தி செய்த இவர் எவ்வாறு யாகசாலையில் பிரவேசிக்கலாம்?'' என்று சபையிலிருந்த அரசனிடம் பராவசு உரக்கச் சொன்னான்.

இதை அரசன் கேட்டவுடன், அர்வாவசுவை உடனே அப்புறப் படுத்திவிட வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டான்.

''பிரம்பஹத்தி என்னால் செய்யப் பட்டதில்லை'' என்று அர்வாவசு முறையிட்டான். யாவரும் அவன் பேச்சைக் கேட்கவில்லை. மிக்க அவமானத்துடன் யாக சாலையிலிருந்து துரத்தப் பட்டான்.

'' சத்தியமாகச் சொல்லுகிறேன். பிரம்பஹத்தி செய்தது என் அண்ணன். அவனுக்காக நான் விரதம் இருந்து அவனைக் காப்பாற்றினேன் '' என்று அர்வாவசு திரும்பத் திரும்பச் சொன்னான்.

'' பிரம்பஹத்தியும் செய்து விட்டு அதற்காக விரதமும் இருந்து விட்டுப் பொய்யாக அண்ணன் மேல் பழி போடுகிறாயே ?'' என்று அவனை அனைவரும் முன்னைவிட அதிகமாக ஏசித் துரத்தினார்கள்.

இவ்வாறு அநியாயமாக அபவாதத்துக்கு இரையாக்கப்பட்டுப் பொய்யன் என்றும் ஏசப்பட்டுத் தர்மாத்வான அர்வாவசு பேசாமல் வனம் சென்றான். பிறகு உக்கிரமான தவம் செய்தான்.

தேவர்கள் பிரசன்னமாகி, ''நீ தர்மவான் ! உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டனர்.

தனக்கு அண்ணன் இழைத்த அநியாயத்தில் உண்டான கோபம் அதற்குள் முற்றிலும் இழந்தவனாகி, தன்னுடைய பிதா மறுபடியும் உயிர்



படைத்து வரவேண்டும் என்றும், தன் சகோதரன் தோஷமில்லாதவனுகவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான்.

''அப்படியே ஆகுக!'' என்று தேவர்களும் வரம் கொடுத்தார்கள்.

இந்தக் கதையை லோமசர் யுதிஷ்டிரனுக்கு ரைப்யர் ஆசிரமத்தண்டை சொல்லி, ''பாண்டவர்களே! கங்கையில் ஸ்நானம் செய்யுங்கள்! புண்ணிய நதியில்கோபத்தைஒழியுங்கள்'' என்ருர்.

அர்வாவசுவும் பராவசுவும் ஒரே தகப்பன் மக்கள். ரைப்யர் மகா வித்துவான். அவரிடம் இருவரும் கூடவே படித்துப் பண்டிதர்களாஞர்கள். ஆயினும் படிப்பு வேறு, குணம் வேறு. நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்தபின் ஒருவன் தீய செயலில் புகமாட்டான் என்பது உண்மை. ஆனல், அடைந்த அறிவானது உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து நிலேயாக இருக்க வேண்டும். அப்போதே படிப்பும் சீலமும் ஒன்ருகும். உள்ளத்தில் ஊடுருவிப் பாயாத கல்வி, சீலத்தை உண்டாக்காது. வெறும் பாண்டித்தியமாகத்தான் நிற்கும்.

# 36. அஷ்டாவக்கிரன்

பாண்டவர்கள் வனவாசம் செய்து கொண்டு சுற்றித் திரிந்த போது உபநிஷத்தில் சொல்லப்பட்ட உத்தாலகருடைய ஆசிரமம் இருந்த இடத்துக்கு ஒரு நாள் வந்து சேர்ந்தார்கள். லோமசர் அந்த ஸ்தலத்துக்குரிய கதையை யுதிஷ்டிரனுக்குச் சொன்ஞர்.

வேதாந்தம் உபதேசித்த பெரியோர்களில் சிறந்தவரான உத்தாலகருக்குக் கஹோளர் என்ற ஒரு சிஷ்யர் இருந்தார். அவர் மிகுந்த நியமமும் பக்தியும் கொண்டவர். ஆனல், அவருக்குக் கல்வி கற்கும் திறமை இல்லே. இதனல் அவரை மற்ற சிஷ்யர்கள் சிரித்துப் பரிகசிப்பார்கள். உத்தாலகர் இதைப் பொருட்படுத்தாமல் கஹோளருடைய நல்ல குணத்தையும், பக்தி, சீலம், நியமம் இவற்றையும் பார்த்துத் திருப்தியடைந்து தம் குமாரத்தி சுஜாதையை அவருக்கு விவாகம் செய்து கொடுத்தார்.

கஹோளருக்கும் சுஜாதைக்கும் ஒரு மகன் உண்டானன். தகப்பன் தாய் இருவர்களுடைய குண விசேஷங்களும் குழந்தைக்குப் பிறவிச் சம்பத்தாகும். உத்தாலகருடைய பேரனை இந்தக் குழந்தை தாய் வயிற்றிலிருக்கும் போதே வேதத்தை அறிந்து விட்டதாகச் சொல்லப்படுகிறது. கஹோளர் தப்பும் தவறுமாக அத்தியயனம் செய்வதை வயிற்றுக்குள்ளிருந்த குழந்தை கேட்டுப் பிழைகளேப் பொறுக்க மாட்டாமல் கருவிலேயே எட்டுக் கோணல் அடைந்து விட்டதாம். அந்தக் கோணல்களுடன் பிறந்ததால் குழந்தைக்கு அஷ்டாவக்கிரன் என்று பெயர் வழங்கிற்று. வக்கிரம் என்ருல் கோணல்.

அஷ்டாவக்கிரன் பால்யப் பருவத்திலேயே சிறந்த வித்துவாஞக வளர்ந்தான். பன்னிரண்டு வயதுக்குள்ளேயே வேத வேதாந்தங்களே ஓதி முடித்து விட்டான்.

ஒரு நாள் மிதிலேயில் ஜனகன் ஒரு பெரிய யாகம் நடத்துவதாகவும் அங்கே வழக்கம்போல் வித்துவான்கள் கூடி, சாஸ்திரங்களே வாதிப்பார்கள் என்றும் கேள்விப்பட்டு, அஷ்டாவக்கிரன், ''மிதிலேக்குப் போகலாம் வா!'' என்று தன் அக்காள் மகன் சுவேதகேதுவையும் அழைத்துக் கொண்டு இருவரும் சென்ருர்கள்.

மிதிலேயில் யாகசாலேக்குப் போகும் வழியில் அரசனும் பரிவாரமும் சென்று கொண்டிருந்தார்கள். ''விலகு! விலகு! ராஜாவுக்கு வழிவிட்டு விலகு!'' என்று வேலேக்காரர்கள் கத்திக் கொண்டு முன்னல் சென்ருர்கள். அஷ்டாவக்கிரனே விலகச் சொன்ன போது அவன் :

''ராஜசேவகர்காள் ! குருடனுக்கும் அங்கஹீனர்களுக்கும், பெண்களுக்கும் சுமை தூக்கிக் கொண்டு செல்பவர்களுக்கும் அரசனுமே விலகி வழிவிட வேண்டும். பாதையில் வேதம் ஓதிய அந்தணன் சென்று கொண்டிருந்தால் அவனே விலகிச் செல்லும்படி அரசன் சொல்லலாகாது. இது சாஸ்திரம்'' என்ருன்.

பிராமணப் பையனுடைய கம்பீரப் பேச்சைக் கேட்ட அரசன் பிரமித்து, ''பிராமணச் சிறுவன் சொல்லுவது சரியே ! நெருப்பில் சிறியதென்றும் பெரியதென்றும் இல்லே; சிறு நெருப்பும் சுடும்'' என்று தன் பரிவாரத்துக்குச் சொல்லி வழிவிட்டு விலகினன்.

யாகசாலேயில் அஷ்டாவக்கிரனும் சுவேதகேதுவும் நுழைந்தனர். ''இந்த இடத்தில் சிறுவர்கள் பிரவேசிக்கக் கூடாது. வேதம் ஓதிய முதிர்ந்தவர்களே யாகசாலேக்குள் போகலாம்'' என்று வாயில் காப்போன் தடுத்தான்.

''நாங்கள் சிறுவர்கள் அல்ல. விரதங்களேக் காத்து வேதம் ஓதியவர்களாவோம். வேதாந்த சாஸ்திரத்தின் முடிவுகளே அறிந்தவர்கள். வயதையும் வெளித் தோற்றத்தையும் பார்த்து,

ஒருவனைச் சிறியவன் என்று நிச்சயிக்கக் கூடாது'' என்றான் அஷ்டாவக்கிரன்.

துவாரபாலகன், ''நில், நில்! வீண் பேச்சுப் பேசுகிறாய். தற்புகழ்ச்சி வேண்டாம். சிறுவனாகிய நீ எவ்வாறு உபநிஷத்தை ஓதிவேதாந்த உண்மையை அறிந்திருக்க முடியும்?'' என்றான்.

''இலவங்காயைப் போல் வெளி வடிவம் பருத்து உள்ளே வெறும் பஞ்சாக இருந்தால் என்ன பயன்? வெளித் தோற்றம் அறிவுக்குப் பிரமாணமாகாது. முதிர்ச்சி என்பது சரீர வடிவத்தில் இல்லை. உயரமாக வளராதவனும் ஞானம் அடைந்திருந்தால் சாஸ்திரப்படி முதிர்ந்தவன் ஆவான்; அறிவு அடையாத மனிதன் வயதினால் மட்டும் முதிர்ந்தவன் ஆக மாட்டான். என்னைத் தடுக்காதே'' என்றான் சிறுவன்.

''சிறு பையனாயிருந்து ஏன் வீணாக முதிர்ந்தவனைப் போல் பேசுகிறாய்?'' என்றான் வாயில் காப்போன்.

''துவாரபாலகனே! தலை மயிர் நரைப்பது முதிர்ச்சிக்குப் பிரமாணமல்ல. வயதும், தலை நரைப்பும், பொருளும், பந்துக்களின் கூட்டமும் ஒருவனைப் பெரியவனாக்கும் என்று ரிஷிகள் சொல்லவில்லை. எவன் வேதங்களை அங்கங்களுடன் படித்து ஆராய்ந்து பொருள் அறிந்திருக்கிறானோ அவனே பெரியவன். நான் அரசனுடைய முக்கிய வித்துவானாகிய வந்திப் பண்டிதனைப் பார்க்க வந்திருக்கிறேன். ஜனகராஜனுக்கு என் விருப்பத்தைத் தெரிவிப்பாயாக'' என்றான் அஷ்டாவக்கிரன்.

இதற்குள் அரசன் வந்து சேர்ந்தான். பையனுடைய சாகசத்தை வாயில்காப்போன் அரசனிடம் தெரியப்படுத்தினான். அஷ்டாவக்கிரனைப் பார்த்து, தான் முந்திப் பார்த்த சிறுவன் என்பதை அரசன் தெரிந்து கொண்டான்.

''என்னுடைய வித்துவான் வந்தி, பல பெரிய வித்துவான்களை இதற்கு முன் வாதத்தில் தோற்கடித்து அவர்களைக் கடலில் வீழ்த்தும்படி செய்திருக்க, சிறுவனாகிய நீ ஏன் இந்தத் துணிச்சல் காரியம் செய்கிறாய்?'' என்று அரசன் கேட்டான்.

''உம்முடைய வித்துவான் என்னைப் போல் வேதாந்தப் பயிற்சி பெற்றவர்களுடன் வாதிக்கவில்லை. பண்டிதர்களாகாதவர்களைத் தோற்கடித்து அகம்பாவம் கொண்டிருக்கிறார். என் தகப்பனாரை இவர் வென்று அவரை நீரில் மூழ்க வைத்ததாக என் தாயாரிடம் நான் அறிந்து, அதற்காகவே கடன் தீர்க்க வந்திருக்கிறேன். இவரை நான் எதிர்த்து வெல்லப் போகிறேன். அச்சு முறிந்த வண்டி வீழ்வதைப் போல் உம்முடைய வித்துவான் என் முன் வீழ்வதைப் பார்ப்பீர். உம்முடைய வந்தியை என்னருகில் அழைத்து வரச் செய்வீராக'' என்றான் அஷ்டாவக்கிரன்.

வந்தியுடன் அஷ்டாவக்கிரன் வாதம் நடத்தினான். கேள்விகள் கேட்கப்பட்டு ஒருவர் சொல்லுக்கு ஒருவர் பதில் சொல்ல, மிதிலாநகரத்துத் தலைமைப் பண்டிதனான வந்தி தோல்வி அடைந்து அஷ்டாவக்கிரன் வெற்றியடைந்ததாகச் சபையில் உள்ளோர் அனைவரும் ஒப்புக்கொள்ள நேர்ந்தது. மிதிலாநகரத்துப் பண்டிதன் தலை குனிந்தான். பந்தயப்படி அவன் கடலில் அமிழ்த்தப்பட்டு வருணாலயம் சென்றான்.

அப்போது அஷ்டாவக்கிரனுடைய தகப்பனாரான கஹோளருடைய ஆத்மா மகனுடைய புகழைக் கண்டு மகிழ்ச்சி அடைந்து சொன்னதாகப் பௌராணிகர் அவன் வாய்மூலம் தத்துவத்தை விளக்குகிறார்.

''தகப்பனைப் போல் மகன் இருக்க வேண்டியதில்லை. தேக பலம் இல்லாத தகப்பனுக்குத் தேக பலம் படைத்த மகனும், கல்வி கற்பதற்கு வேண்டிய திறமையைப் படைத்திராத ஒருவனுக்குப் பண்டித குமாரனும் உண்டாவதுண்டு. வடிவத்தையும், வயதையும் பார்த்து மனிதனுடைய பெருமையை நிர்ணயிப்பது தவறு. வெளித் தோற்றம் ஏமாற்றத்தைத் தான் தரும்.''

**(தொடரும்)**



# பாலைவனம் சோலைவனமாகியது

## அநுபவம் புதுமை

**பா**லைவனம் சோலைவனமாயிற்று என்று சாதாரணமாக நாம் வருணிப்பதுண்டு. ஆனால் நூற்றுக்கு நூறு இது உண்மையாகியுள்ள ஓரிடத்தை நான் அமெரிக்காவில் பார்த்தேன். பீனிக்ஸ் நகருக்கு அருகில் ஸால்ட் ரிவர் பிராஜெக்ட் என்று ஒரு பிரும்மாண்டமான திட்டம். உப்பு நதித் திட்டம் என்று பெயர் பெற்றிருப்பதால் இது உப்பு நீரைக் குடிநீராக மாற்றும் திட்டம் என்று யாரும் தவறான முடிவுக்கு வந்துவிடக் கூடாது.

அரிஸோனா ராஜ்யம் பெரும் பகுதி பாலைவனமாக இருந்த பூமி. இங்கே ஓடிய ஸால்ட் நதியைச் சிறந்த முறையில் பயன்படுத்திப் பாலைவனத்தை வளமான பூமியாக்கிப் பலரகப் பயிர்களை விளைவிக்க உதவுவது இத்திட்டம். மனிதனால் நிகழ்த்தப்பட்ட ஓர் அற்புதம் என்றே வர்ணிக்கலாம். சப்பாத்திக் கள்ளி தவிர வேறு எதையுமே காண முடியாத பிரதேசத்தில் இன்று பருத்தியும் வேறு பல பயிர்களும் செழிக்கின்றன.

உறுதி, உழைப்பு, தீர்க்க தரிசனம் ஆகியவை சாதித்துள்ள இந்த அற்புதம் தொடங்கியது 1903ம் ஆண்டில். அப்போது அந்தப் பகுதியில் வாழ்ந்த சிலர், ஸால்ட் நதி நீரை உபயோகிப்போர் சங்கம் என்ற ஒன்றை அமைத்தார்கள். அணைகள் கட்டிப் பல கால்வாய்களை வெட்டிச் சென்று விவசாயத்துக்குப் பயன்படுத்துவதென ஸால்ட் நதி திட்டம் தீட்டினார்கள்.

ஆரம்பத்தில் அரசாங்கமே இந்தத் திட்டத்தை அமுல்படுத்த முன் வந்தது. பிறகு இதனால் ஏற்படும் ஏராளமான செலவும் இத்திட்டம் நிர்வகிக்கப்படும் முறையும் கண்டனத்துக்குள்ளாகவே அரசாங்கம் இந்தத் திட்டத்தை அமுல்படுத்தும் பொறுப்பை அந்நதி நீரை உபயோகிப்போரிடமே கொடுத்து விட்டது. நஷ்டம் ஏற்பட்டாலும் நாங்களே நடத்தித் தீருவோம் என்று அந்த அரசாங்கம் சிறுபிள்ளைத்தனமாக முரண்டு பிடிக்கவில்லை.

ஸால்ட் நதி நீரை உபயோகிப்போர் சங்கத்திடம் பொறுப்புக்கள் ஒப்படைக்கப்பட்ட பிறகு அச் சங்கம் இந்த நதி நீரினால் பயனடையப் போகும் நிலத்தை யெல்லாம் மத்திய அரசாங்கத்துக்கு அடமானமாக வைத்துக் கடன் பெற்றுத் திட்டத்தை அமுலாக்கத் தொடங்கியது. மேலும் இதற்கு அரிஸோனா ராஜ்ய சர்க்காருடன் போராடி வரி விலக்குப் பெற்றது. ராஜ்ய சர்க்காரும் இதன் முக்கியத்துவத்தை உணர்ந்து வரி விலக்கு அளித்தது. நாளா வட்டத்தில் 'ஸால்ட் நதித் திட்டம்' வளர்ச்சி யுற்று மின்சாரத் தயாரிப்பிலும் ஈடுபடத் தொடங்கியது. இன்று ஆறு அணைக்கட்டுகளும் பல மின்சார உற்பத்தி நிலையங்களும் உள்ளன. மின்சார உற்பத்தி காரணமாக ராஜ்யத்தில் விரைவாகத் தொழில் வளமும் பெருகத் தொடங்கியது. லாபகரமாகச் செயல்படத் தொடங்கிய பிறகு திட்ட நிர்வாகிகள் சட்டப்படி தங்களுக்கு வரி விலக்கு

**கி. ராஜேந்திரன்**

மேலே: வர்டி நதியும் ஸால்ட் நதியும் ஒன்று சேரும் இடத்தில் ஒரு பெரிய அணைக்கட்டு. இங்கிருந்து பல கால்வாய்கள் நிலத்தை வளப்படுத்தச் செல்கின்றன.

கீழே: ஸைபன் குழாய்கள் வழியாக வயல்களுக்கு நீர் கால்வாய்களிலிருந்து பாய்கிறது.





மரங்களும் தோப்பும் கால்வாயின் இருபுறமும் அமைந்து அழகு தருகின்றன.

அளிக்கப்பட்டிருந்த போதிலும் தாங்களாகவே மனமுவந்து அரிஸோனா ராஜ்ய சர்க்காருக்குப் பணம் கொடுக்கத் தொடங்கினார்கள்! ஸால்ட் நதி உபயோகிப்போர் சங்கத்தின் தலைவரும் இயக்குனர்களும் வாக்கெடுப்பு முறையில் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள். இது போன்று ஜனநாயக அமைப்புக்களும், சிந்தனையும் அரசியலில் மட்டுமின்றி அமெரிக்காவில் வேறு பலப் பல துறைகளிலும் உண்டு.

"ஏழு முக்கியமான நீண்ட கால்வாய்களும், 1200 மைல்கள் மொத்த நீளமுள்ள சிறு வாய்க்கால்களும் கொண்ட இத் திட்டம் 250,000 ஏக்கர் நிலத்தை வளப்படுத்துகிறது" என்று இந்தத் திட்டத்தின் தலைவர் கூறினார். தொடர்ந்து, "நாங்கள் செய்வது ஒன்றும் புதிய விஷயமல்ல. இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே இங்கு வசித்த ஆதிவாசிகள் சிலர் ஸால்ட் நதியிலிருந்து கால்வாய் வெட்டிச் சென்றிருக்கிறார்கள். அந்தக் கால்வாய்களில் சிலவற்றைச் சீர்திருத்தி நாங்கள் இன்றும் பயன்படுத்துகிறோம்" என்றார்.

அப்போது என் அருகில் இருந்தவர் தமிழ் நாட்டு அரசாங்கத்தின் விவசாய இலாகாவைச் சேர்ந்த திரு ராமநாதன். அவர், "பழம் பெருமை பேச ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் நாங்கள் விட மாட்டோம்! தமிழ் நாட்டில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் சோழ மன்னனால் கட்டப்பட்ட கல்லணையை இன்றைக்கும் பொறி இயல் நிபுணர்கள் கண்டு வியக்கிறார்கள்" என்று சொல்லி ஸால்ட் நதித் திட்டத் தலைவரைத் திகைப்பில் ஆழ்த்தினர்.

அமெரிக்காவில் விவசாயத் துறையில் நான் கண்ட அதிசயங்களுக்கு நேர் மாறுதலான வேறொரு அதிசயத்தை ஜப்பானில் பார்த்தேன்.

யுத்தத்துக்குப் பின் அந்தச் சிறு நாட்டில் இருந்த பெரிய நிலப் பிரபுக்களின் நிலத்தையெல்லாம் அரசாங்கம் பறிமுதல் செய்து விட்டது. ஏழை விவசாயிகளுக்கே எல்லா நிலத்தையும் பிரித்துக் கொடுத்தது. அத்துணை சிறிய நாட்டைக் கூறு போட்டால் என்ன கிடைக்கும்? ஆளுக்கு 2.8 ஏக்கர் நிலம்தான் கிடைத்தது. விற்பதும் வாங்குவதும் அனுமதிக்கப்பட்டதால் இன்று சில விவசாயிகள் இதை விடச் சற்று அதிகமாக நிலம் வைத்திருக்கிறார்கள். இப்படிச் சிறு சிறு துண்டு நிலங்களை வைத்திருந்த போதிலும் 95 சதவீதம் ஜப்பானிய விவசாயிகளின் இல்லங்களில் இன்று டெலிவிஷன் இருக்கிறது. யொட்டோவிலிருந்து நாராவுக்கு பஸ்ஸில் போகும்போது அங்கங்கே உள்ள விவசாயிகளின் வீடுகளுக்கு மேலே டெலிவிஷன் 'ஏரியல்' இருப்பதைக் காணலாம். நான் சென்றபோது அறுவடை சமயம். கதிரின் கனம் தாளாமல் பயிர் படுத்துக் கிடந்தது. மூங்கில் கொம்பை நட்டு அறுவடையான நெற்பயிரைத் துணி காயப் போடுவது போல் தொங்க விட்டிருந்தார்கள். விவசாயிகளுக்குச் சொந்தமான ஏராளமான மோட்டார் சைக்கிள்கள் வயல் வரப்புகளுக்கு அருகே நிறுத்தப்பட்டிருப்பதைப் பார்த்துக் கொண்டே சென்றேன். அதைக் காட்டிலும் அதிகமாகச் சிறிய 'தோட்ட டிராக்டர்'கள் காட்சியளித்தன. இந்த உழும் இயந்திரத்தில் அமர்ந்து ஓட்ட முடியாது. கையால்

ரூஸ்வெல்ட் அணை - ஸால்ட் நதித் திட்டத்தில் முதன் முதல் கட்டப்பட்ட பெரிய அணை.



பிடித்துக் கொண்டு அதன் பின்னுலேயே நடந்து போக வேண்டும். அமெரிக்காவில் தனி நபர்கள் தங்கள் தோட்டங்களில் பயன் படுத்தும் இந்த ரக டிராக்டர்களை ஜப்பானி யர் சிறிய அளவினதான தங்களது நிலங் களில் பயன்படுத்தி மகத்தான வெற்றி கண்டிருக்கின்றனர்.

இந்த மாதிரியான சிறு டிராக்டர்கள் தான் இந்தியாவுக்கு ஏற்றது என்று நிர் மானித்துப் பாரத அரசாங்கம் தானே ஒரு டிராக்டர் தொழிலகத்தை ஆரம்பித்தது. அமெரிக்காவில் ஒரு தனியார் நிறுவனம் ஒரு நாளைக்கு எழுபத்தைந்து டிராக்டர்களைத் தயா ரிக்கையில் இங்கு சர்க்கார் துறையில் ஆண் டொன்றுக்கு நாற்பது டிராக்டர்களைத் தயா ரித்தால் லாபம் எப்படி வரும்? விவசாயம் முன்னேறுவதுதான் எந்தக் காலத்தில்?

ஜப்பானிலும் அமெரிக்காவிலும் விவ சாயத் துறையில் நிகழ்ந்துள்ள அரிய சாதனைகள் பலவற்றை நேரில் கண்ட போதிலும் இறைச்சிக்காக மிருகங்களைக் கொழுக்க வைக்கும் முறையில் சில அரு வருக்கத் தக்க பழக்கங்கள் இருப்பதையும் கண்டேன். ஜப்பானில் மாட்டிறைச்சிக்காக மாட்டைக் கொழுக்க வைக்கிறார்கள். அதை அந்தண்டை இந்தண்டை போக விடாமல் அடைத்து வைப்பார்கள். ஒரே இடத்தில் சோம்பிக் கிடந்தால்தான் கொழுக்குமாம். மேலும் ஓடி ஆடி செய்தால் இறைச்சி மிருது வாக இராமல் கடினமாகி விடும் அல்லவா? தீனியைத் திட்டமிட்ட அளவுக்குத் திணிப் பார்கள். தேகப்பயிற்சி இல்லாததால் அதற் குப் பசிக்காது. பசி இல்லாததால் சாப்பிடா மல் இருக்கும். அப்போது விஸ்கியைக் குடிக் கச் செய்வார்கள். மது அருந்தியதும் அதற் குப் பசிக்கும்; தீனியை விழுங்கும். பீர் என்ற மது வகை உடலை ஊத வைக்கும். ஆகவே மாடுகளுக்குப் பீர் நிறையக் கொடுத்துப் பழக்குவார்கள். ஒயின் எனப்படும் மது வினுல் அதைக் குளிப்பாட்டி 'மஸாஜ்' செய்வார்கள்! அமெரிக்காவிலும் பிரிட்ட னிலும் பன்றி, கன்று, ஆடு, கோழி இவற் றைச் சோம்பிக் கிடக்குமாறு அடைத்து வைத்துப் பெருந் தீனியைத் திணிக்கும் பழக் கம் உண்டு. ஆடு, பன்றி இவற்றின் எடை கூடினுல்தானே பண்ணை நடத்துபவருக்கு லாபம்?

# படித்துப் பாருங்கள்

## ராஜாஜி

வாழ்க்கைச் சரித்திநூல், சுயசரிதை நூல் இவற்றில் ராஜாஜிக்கு அவ்வளவாக நம் பிக்கை இல்லை. மகாத்மா காந்தியடிகளைப் போல் சத்திய சோதனை செய்து பற்றற்ற பரிசுத்தமான மனத்துடன் எத்தனை பேர்கள் சுயசரிதம் எழுதி விடுகிறார்கள்? ஜான்ஸனுக்கு ஒரு பாஸ்வெல் அமைந்தது போல் எல்லா அறிஞர்களுக்கும் அதிர்ஷ்டம் அடிக்கிறதா?

பிரபல தலைவர்களின சுயசரிதை நூல் என்பது தனக்குத் தானே வக்காலத்து வாங்கிக் கொண்டு தான் செய்ததே சரி என்று வாதாடித் தங்களைச் சிறப்பித்துக் கொண்டு ஆதரவும் புகழும் தேடுவதாய் அமைந்து விடுகிறது பல சந்தர்ப்பங்களில். வாழ்க்கைச் சரித நூல் எழுதுவோர் பலர், தங்கள் நூலின் நாயகனை 'இந்திரன் சந் திரன்' என்று வர்ணித்து நாவலாசிரியர் களாகவே மாறி விடுகிறார்கள்!

இதனுலெல்லாம் ராஜாஜி அவர்கள் சுய சரிதம் எழுதவும் விரும்புவதில்லை; தமது சரித்திரத்தைப் பிறர் எழுதுவதை அவர் வர வேற்பதுமில்லை. அப்படித் தமது வாழ்க்கை வரலாற்றை எழுத முற்படுவோருக்கு எந்த விதமான ஒத்துழைப்பையும் நல்கமாட்டார் அவர். மோனிகா ஃபெல்டன் அம்மையாரைக் கேட்டால் தெரியும்! கல்கி அவர்களே, ''நாட்டுக்கொரு புதல்வ''ரை முழுமையாக எழுதவில்லையே!

இந்த விவரங்களை யெல்லாம் நன்கு உணர்ந் திருப்பினும் திரு ''கௌசிகன்'' தலைவர் ராஜாஜி அவர்களைப் பற்றித் தரமானதொரு நூல் வெளிவர வேண்டும் என்ற பேராவலால் உந்தப்பட்டு இந்த வாழ்க்கை வரலாற்றை எழுதியுள்ளார். ராஜாஜி அவர்களை அணுகி ஞல் இந்த முயற்சி வேண்டாம் என்று சொல்லி விடுவார் என்பதால் தாமாகவே பல ஆதாரங்களை வைத்துக் கொண்டு எழுதியிருக் கிறார். கல்கி அவர்களின் 'நாட்டுக் கொரு புதல்வர்' என்ற புத்தகம், கல்கி பத்திரிகை யின் ராஜாஜி மலர்கள் சில, பழைய ஹனு மான் பத்திரிகைகள், இன்னும் சில பத்திரி கைகள், புத்தகங்கள், குறிப்புக்கள் ஆகியவை இவர் பல தகவல்களைச் சேகரிக்க உதவியிருக் கின்றன. இப்படிப் பல விஷயங்களைத் தொகுத்து எளிய தமிழில் சுவை குன்ருது படித்துக் கொண்டு போகும் வகையில் எழுதி யுள்ளார். கல்கி ஸ்தாபனத்தின் ஒத்துழைப்பு காரணமாக ஏராளமான புகைப்படங்களை இப்புத்தகத்தில் சேர்க்க முடிந்திருக்கிறது. புத்தகத்தின் அமைப்பு இதனுல் மிகச் சிறப் பானதாகிறது. அச்சுப் பிழைகள் மலிந்துள் ளன; தவிர்த்திருக்கலாம்.

ராஜாஜியின் சிறந்த குண இயல்புகள் பலவற்றை விளக்கும் ரசமான சம்பவங்கள் இப்புத்தகத்தில் இடம் பெற்றுள்ளன. ஆனுல் பாரதம் வேறு, ராஜாஜி வேறு என்று பிரித்துப் பார்க்க முடியாதபடி இந்த நாட்டுச் சரித்திரத்துடன் இணைந்து நிற்பவரல்லவா அவர்? இந்தக் கோணத்திலே நோக்கும் போது இந்தத் தேசத்தின் சரித்திரப் போக் கினை நிர்ணயித்த பல முக்கியமான கட்டங் களில் ராஜாஜியின் பங்கு என்னவாக இருந் தது என்பது இன்றைக்கும் பெருமளவுக்கு மர்மமாகவே இருந்து வருகிறது. அவரது அனுமதி பெற்று ஆதாரபூர்வமான ஒரு வர லாற்று நூல் வெளியாகும்வரையில் அல்லது அவரே தமது சுயசரிதத்தை எழுதத் தீர் மானிக்கும் வரை இந்நிலையேதான் நீடிக்கும்.

பிரசுரம்: வானதி பதிப்பகம், சென்னை-17. விலை: ரூ. 4—50.

# வாடர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

## நிவாரணத்துடன், நோய்களை எதிர்க்கும் சக்தியையும் தருகிறது!

இருமலும், ஜலதோஷமும் உங்களைப் பலவீனப்படுத்தி, உங்கள் உடலில் நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைக்கும். இதனால் இதர நோய்களும் உங்களை எளிதில் பாதிக்கக்கூடும்.

பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டளித்து, உடலுக்கு நோய்த் தடுப்புச் சக்தியை அளிக்கக் கூடிய, ஊட்டமளிக்கும் பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸோட் மற்றும் க்வயகால், இருமலிலிருந்தும், ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன.




**சக்திக்கும் ஆரோக்கியத்திற்கும் வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்துங்கள்!**




வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்



முகத்தின்
முறுவலுக்குத்
தேவை
முழுப் பாதுகாப்பு...

# கிருமிகள் அணுகாதவாறு உங்கள் வாய்க்கு முழுப் பாதுகாப்புத் தருவது **ஸிக்னல்**

**அதன் செவ் வரிகளிலிருப்பது
கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன்**

ஸிக்னல் பற்பசையின் செவ்வரிகளே சொல்லும்: கிருமிகளைத் தாக்கும் ஹெக்ஸாக்ளோரபீன் அடங்கியுள்ளதற்கு சாட்சி. முகத்தின் முறுவலை முத்தெனப் போற்றிக் காப்பீர்.... கிருமிகள் அணுகாது வாய் முழுவதையும் காத்துக்கொள்ள ஸிக்னல் உபயோகியுங்கள். புதுமையின்பச் சுவை, மிதமிஞ்சிய நுரை...வாயார உங்கள் பற்கள் வெண்மை யோங்கும்: வாய்நிரம்பும் தூய்மையோடு உங்கள் வாய் மலரும். ஸிக்னல் புன்னகையே ஆரோக்கியப் புன்னகை!






கண்கூடாகக் காணும்படி,
ஓர் நச்சுநாசினி
அடங்கிய பற்பசை
இது ஒன்றே

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-SG. 5-140 TM

# கவிபுரம் குகைக் கோயில்

பெங்களூரில் ஆராய்ச்சியாளருக்கு ஒரு குகைக் கோயில் அதன் விவரங்கள்...



என். ராமகிருஷ்ணன்



பெங்களூரில் புதை பொருள் ஆராய்ச்சிக்காரர்களுக்கு மிகவும் விருப்பமான ஒரு குகைக் கோயில் உள்ளது. இந்தக் கோயிலில் உள்ள பெருமானுக்குப் பெயர் கங்காதீசுவரர். கௌதம மகரிஷி இங்குள்ள குகையில் தவம் கிடந்து சுயம்புலிங்கத்தை வழிபட்டார் என்பது புராண வரலாறு. பிறகு இந்த லிங்கம் கெம்பேகவுடருக்குக் கொடுக்கப்பட்டது. அவர் தான் பெங்களூரை உருவாக்கி ஓர் அழகான கோயி



லும் கட்டினார். இக்கோயில் இரண்டு பாகங்கள் கொண்டது. சிவன் கோயில் ஒரு பக்கமும், பார்வதி கோயில் மற்றொரு பக்கமும் உள்ளன. சோழர் காலத்தில் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இந்தக் கோயிலில் விசேஷமான ''பலிஸ்தம்பம்'' உள்ளது. முக்கியமாக இந்தக் கோயிலில் கற்களால் ஆன நான்கு புராதனச் சின்னங்கள் உள்ளன. இரண்டு ''கல் வட்டங்கள்'' சிற்ப வேலைப்பாடுகளுடன் இருபத்தைந்து அடி ஸ்தம்பத்தின் மீது காட்சி அளிக்கின்றன. மற்ற இரண்டு ஸ்தம்பங்களின் மீது ''திரிசூலமும்'', ''டமருகமும்'' உள்ளன. இவை நம் மனத்தைக் கவர்கின்றன. பக்கத்தில் உள்ள தடாகத்தின் பெயர் — ''ரேபாம்புதி''.

கோயிலின் பெயர் கவி கங்காதீசுவரர் ஆலயம். மலை மீது அழகான சிற்பங்கள் உள்ளன. கறுப்பு கற்களால் ஆன மண்டபங்கள் உள்ளன. சிவபெருமானுடைய ஆயுதங்களே பெரிதாக உள்ளன. சங்கராந்தியன்று சூரியக் கிரணங்கள் காலையில் கவி கங்காதீசுவரர் மீது வீழ்கின்றன. மூலஸ்தானத்தைச் சுற்றி நான்கு அடி அகலமுள்ள குகை உள்ளது. குகையின் மேல்பக்கத்தில் இருந்து தண்ணீர் சொட்டிக்கொண்டே இருக்கிறது. இக்குகையிலிருந்து காசிக்கு ஒரு வழி செல்கின்றது என்று கூறுகின்றனர். ஆனால் முந்நூறு அடிக்கு மேல் செல்ல முடியவில்லை.

---

1. திரிசூலம்.
2. கல்வட்டம்.
3. கவிபுரம் குகைக் கோயில்.
4. டமருகம்.
5. நந்திகளும் சிற்ப வேலைப் பாடும்.







# இனிக்கும் நினைவுகள்

கோமகன்

## 12. தங்க வலை

ஆஸ்பத்திரியில் கூட்டம் வழிந்தது. தினமும் காலை வேளையில் இப்படித் தான் இருக்கும்.

சீலியா தன் இருப்பிடத்துக்கு வந்து உட்கார்ந்து ஒரு கையை ஊன்றி, மறு கையை முகவாயில் புதைத்தவாறே யோசனையில் ஆழ்ந்தாள். அவளது சிவந்த மேனி எழிலை அதிகரிக்கும் ஊதா நிற நூல் சேலை. அதன் பார்டருக்கு ஏற்ற வெளிர் நிறக் கத்தான் சோளி. பரபரக்கும் முக பாவம். நடுவில் அவளைக் கலைக்கவோ, வேறு திக்கில் திருப்பவோ யாராலும் முடியாத லயிப்பு. அன்பெனும் தங்க வலையில் அகப்பட்டு மின்னும் காதல் மீனைப் போன்ற இன்பத் தத்தளிப்பு.

கொஞ்ச நேரத்திலேயே தலைமை டாக்டருடன் வசந்தனும் வந்து உட்கார்ந்தான். மரியாதை தரும் முறையில் எழுந்துகொண்ட சீலியா பெரியவரின் கையமர்த்தலுக்கு உட்பட்டு அமர்ந்தாள். நோயாளிகளின் 'க்யூ' நகர்ந்து வந்த வண்ணம் இருந்தது. டாக்டர்கள் இருவர் விடுமுறை கோரியிருந்ததால் எல்லோரையும் பார்த்து முடிய வழக்கத்தைவிட ஒரு மணி அதிகம் பிடித்தது.

தலைமை டாக்டர் போன பின்னால் வசந்தன் சீலியாவுக்காகத் தாமதித்தான்.

குறிப்புக்களை எழுதி முடித்துவிட்டு நிமிர்ந்தபோது தன்னையே பார்த்தவாறு வசந்தன் அமர்ந்திருப்பதைக் கண்ட சீலியாவுக்கு வெட்கமாகப் போய்விட்டது. அதைச் சமாளிக்க ''என் வாழ்த்துக்கள், முதற் பரிசுக்கு!'' என்றாள்.

''உன்னை நீயே வாழ்த்திக் கொள்கிறாயோ?''

''அப்படி ஏதுமில்லையே!''

''சரி, வேண்டாம். உன்னை நீயே இரண்டாம் பரிசுக்குத் தாழ்த்திக் கொண்டாய். அந்த உனது வெற்றிக்கு என் மகிழ்ச்சிகளைத் தெரிவித்துக் கொள்ளலாமல்லவா?''

வசந்தனின் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல், ''எனக்கு வேறு வேலைகள் இருக்கின்றன. நான் வரட்டுமா?'' என்று கூறிவிட்டுச் சீலியா எழுந்தாள்.

வசந்தன் தனக்குத்தானே நகைத்துக் கொண்டான். 'இந்த அமைதியின்மையும் இந்தப் படபடப்பும் இவள் சுபாவத்துக்கே விரோதமாயிற்றே!' என்று எண்ணியவன், தூரத்தில் அவள் கேட்டைக் கடக்கும்வரையில் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு தன்னறைக்கு நடந்தான். ஆஸ்பத்திரியே துடைத்துவிட்ட மாதிரி கிடந்தது. வெளி நோயாளிகள் வர வேண்டிய நேரம் கடந்து விட்டதால் ஓரிரு சிப்பந்திகள் மட்டுமே இங்கும் அங்கும் நடந்து கொண்டிருந்தனர். ஆரவாரமெல்லாம் அடங்கி அமைதி மூடிக் கொண்டது. மனத்துக்குள் சிரித்தவாறே 'ஸ்டெத்'தைச் சுழற்றிக் கொண்டு வசந்தன் மெதுவாக வாயிலைக் கடந்தான். இதற்குள் அவன்மேல் மோதிக் கொள்வதுபோல் ஓடி வந்த ஒரு மாணவர் கூட்டம் ''ஹலோ மிஸ்டர் வசந்தன்! கன்கிராஜுலேஷன்ஸ்! எங்களிடம் நீ மறைத்தாலும் பெண்கள் பட்டாளம் காட்டிக் கொடுத்து விட்டதப்பா. 'காப்பியம்' பரிசுப்போட்டியில் முதற்பரிசைத் தட்டி விட்டாயே! ரூபாய் எழுநூறையும் 'கமுக்கமாக' 'பாங்கி'யில் போடப் பார்த்தாயோ? விடமாட்டோம். எங்களுக்கு ஏ கிளாஸ் 'ட்ரீட்' தரவேண்டும். எப்போது தரப் போகிறாய்?'' என்று கும்மாளக் கூச்சலிட்டனர்.

''பார்க்கலாம்!'' என்று அவர்களுக்குச் சாதகமான பதிலைச் சொன்னவன்,

''ஆனால் என் 'மதர்' ஆஸ்பத்திரியில் இருக்கிறாளப்பா!'' என்றான்.

அதைக் கேட்டதும் மாணவர் கூட்டம் எந்த வித வற்புறுத்தலையும் மேற்கொள்ளாமல் கலைந்தது.

அலையைத் தொடர்ந்த சங்கரன், ''நீ பெரிய அதிர்ஷ்டக்காரன் அப்பா! கதை எழுதியதுதான் எழுதினாயே! அதில் மருந்துக்காவது காதல் உண்டா? அதற்கு முதற் பரிசு! உள்ளத்தைப் பிட்டுவைத்துக் காதல் ரசம் கனிவுறச் சொட்ட எழுதிய தமிழரசி கதைக்கு இரண்டாவது பரிசு!— இது அதிர்ஷ்டம்தானே?'' என்றான்.

''ஆமாம். சந்தேகம் என்ன?''

''கேட்கிறானே என்று நினைக்காதே! நெருங்கிப் பழகுவதால் ஏற்படும் அன்பில் உள்ள இன்பம் உனக்குத் தெரிவதேயில்லையா? இப்படி வறட்டுத்தனமாக இருந்தால் வாழ்க்கையை அநுபவிப்பது எப்பொழுதடா?'' என்றான் சங்கரன்.

''வாழ்க்கையை அநுபவிக்கத்தான் நீ இருக்கிறாயே!'' என்று குத்தலாகவும் குறும்பாகவும் கூறி விடைபெற்றான் வசந்தன்.

உடை மாற்றிக் கொண்டு படுக்கையில் விழுந்த வசந்தனின் மனத்தைச் சீலியாவின் நினைவு நிறைத்தது. அந்த எழில் நினைவே குறுநகையாகப் பூத்தது. 'காப்பியம்' இதழை எடுத்து 'அன்னை' என்ற முதற் பரிசுக் கதையை விரித்துப் படித்தான். அந்தக் கதையின் கரு அவன் நினைத்ததென்றாலும் மற்ற அமைப்புக்களும், சம்பாஷணைகளும், முழுவதும் அவளுடையனவா? இப்படி ஓர் உதவி செய்ய வேண்டும் என்று எப்படிச் சீலியாவுக்குத் தோன்றியது? அவளை எது அப்படிச் செய்யத் தூண்டியது? இவ்விதம் காரிய நோக்கங்களும் மேன்மையான குணங்களும் அமைந்த சீலியாவைப் போன்ற ஒரு பெண்ணின் மனத்தில் இடம் பெற அவன் என்ன தகுதி படைத்திருக்கிறான்? நினைக்க நினைக்க இனிய கனவுகள் சுரந்தன.

இரண்டாவது பரிசு பெற்ற 'தமிழரசி'யின் சிறுகதை 'பொற் கனவு'. அது அவள் மனத்தில் பொங்கிக் கிடந்த பொற்கனவேதான். அதைப் படிக்கும்போதே வசந்தன் தனக்காக அவள் மனத்தில் பூத்த உணர்வுகளைக் கண்டாற்போல் உணர்ந்தான். அவளது ஜீவிய ரகசியங்களே உடைப்பெடுத்துப் பெருகிச் சொற் ஜாலங்களாக நடையிடுவதைக் கண்டான். இப்படித் தனித்தனியாக உணரும் இந்த உணர்வுகளுக்கு ஒரு சங்கமம் வேண்டாமா? இணைந்த எண்ணங்களில் பிறக்கும் அன்புப் பரிமாறலை உணர்ந்து ஏற்க வேண்டாமா? அதற்கு இப்போதே ஒரு வழி செய்தால் தேவலை என்ற தூண்டுதல் ஏற்பட்டது. புத்தகத்தை மூடி வைத்துவிட்டு எழுந்த வசந்தன் நெஞ்சின் சபலங்கள் ஓய டெலிபோனை நாடினான். தயக்கத்தோடு நம்பர்கள் சுழன்றன. காதுக்கும் வாய்க்குமாக நீண்டிருந்த குழலில் எதிர்த் தரப்பில் 'கிணு கிணு' வென மணியோசை கேட்பது தெரிந்தது. சிறிது நேரத்தில், ''லேடீஸ் ஹவுஸ் ஸர்ஜன் க்வார்ட்டர்ஸ்'' என்று குரல் வந்தது.

''கால் மிஸ் சீலியா!'' என்று அறிவித்துவிட்டுக் காத்திருந்தான் வசந்தன். முதன் முதலில் அழைக்கும் இந்த அழைப்பில் திடீரெனத் தயக்கம் கவிந்தது. 'போனை' வைத்துவிட்டுப் போய் விடலாமா என்று கூட யோசித்தான். அதற்குள் எதிர்த் தரப்பில் சீலியாவின் தெளிவான குரல், ''யெஸ் மம்மி!'' என்றது.

வசந்தன் சிரித்தான். தன் தாய் அழைப்பதாகக் கருதிச் சீலியா பேசுகிறாள் போலும்! இதற்குள் அவனது சிரிப்பொலியில் வெகுண்டு, ''மே ஐ நோ.... ஹூ ஈஸ் தேர்?'' என்ற கேள்வி பிறந்தது.

''ஓ! தாராளமாக. நான்தான் வசந்தன்!''



கொஞ்ச நேரம் போன் மௌனம் சாதித்தது. மிகவும் மிருதுவாகக் குரல் வெளிவந்தது. ''நீங்களா?'' என்ற விந்தைக் கேள்வி.

''ஏன்? நானாக இருக்கக் கூடாதா?''

இதற்கும் உடனே பதில் வரவில்லை. சில வினாடியில் அதே மிருது கலையாத குரலில், ''நீங்களாக இருக்கலாம்! இத்தனை நாட்களும் இல்லாத புதுமையாக இன்று எதிர்பார்க்கவில்லை'' என்றாள் சிலியா.

''இத்தனை நாளும் என்றால்.....?''

''ஒன்றும் புரியவில்லையாக்கும். இத்தனை நாளும் போன் பண்ண வில்லை என்று அர்த்தம்!'' போனில் நாணத்தை வேறு எப்படிக் காட்ட முடியும்?

வசந்தன் ஸ்தம்பித்துப் போனான். சிலியாவா இப்படிப் பேசுகிறாள்?

''என்ன பதிலைக் காணோம்?''

''இது நமது முதல் போன் அறிமுகம் இல்லையா?''

சிலியாவின் சிரிப்பொலி கலகலத்தது. ''முதலில் இப்படி அறிமுகமாகித்தான் பின்னால் தொடருவது வழக்கம்.''





''தியேட்டரில் பெண்கள் பகுதியில் எனக்கு டூட்டி போடாதீங்க சார்! அவங்களுடைய கைக்குழந்தைகள் அழுகைக் கூச்சலில் நிம்மதியாப் படம் பார்க்கவே முடியறதில்லை !''

---

''இது பழக்கத்தால் ஏற்பட்ட உரிமை என்கிறாயா? அதுமட்டும்தானா? அதற்கு மேல் ஒன்றுமில்லையா?''

வசந்தனின் உரையாடல் திறமையில் மின்னும் வார்த்தை ஜாலங்கள் மனத்தை ஈர்த்துப் பற்றின. அவன் எண்ணம் எதிரே பிரதிபலிக்கும்போது, உடம்பில் மறைந்திருக்கும் நுட்பமான உணர்வுகள் எல்லாம் கட்டவிழ்ந்தது போல் இருந்தது. இதற்கு எப்படிப் பதில் கூறுவது? உள்ளுணர்வின் அர்த்தங்களையும், பாவங்களையும் அத்தனை எளிதில், அத்தனை சீக்கிரத்தில் ஒரே சொல்லிலோ ஒரே பதிலிலோ வெளியிட்டு விடும் திறமையற்றுத் தவிக்கும் பிரமை ஏற்பட்டது. இந்தத் தாமதமும், தவிப்பும் வேறு ஓர் அர்த்தத்தைக் காட்டிவிட்டால் என்ன செய்வது என்ற அச்சமும் தோன்றியது. எனினும், வாய் வார்த்தை சிந்தவில்லை.

''ஹலோ! சீலியா! நீ அங்கு நின்று கொண்டிருக்கிறாயல்லவா ?''

''உம். ஆம். நின்று கொண்டிருக்கிறேன்.''

''வெறுமனே நின்று கொண்டிருக்கிறாயே. பேசேன்.''

''பேச.... எதைப் பேசுகிறது ?''

''ஏன் நான் கேட்ட கேள்விக்குப் பதில் கூறி என் சந்தேகத்தைத் தீர்த்து வையேன்.''

''உங்களுக்குச் சாதகமானது என்றால் போதுமா?''

''எனக்குச் சாதகமானதென்றால்?''

''அப்படி ஒன்றும் அதில் உட்பொருள் மறைந்திருக்க வில்லையே !''

''எனக்குப் புரியவில்லையே சீலியா!''

''தனி இருவரின் வாழ்க்கை இலட்சியங்கள் ஒத்து ஒன்று கூடி, ஒருவருக்கொருவர் விருப்பம் பூண்டு விடும்போது தான் இருவருக்குள்ளும்....''

''இருவருக்குள்ளும்....?''

''அன்பு பிறக்கிறது !''

''ஐஸீ ! அது பிறந்து விட்டதா ?''

''இல்லை என்று தோன்றுகிறதா?''

''நான் கேட்கும் கேள்விக்கு உண்டு என்று நேரடியாகப் பதில் கூறமாட்டாயா நீ?''

''ஒரே பொருளைக் குறிப்பிடுவதானால் அது கேள்வி ரூபத்தில் இருந்தால்தான் என்னவாம்?''

'' பார்த்தாயா ? இதையும் ஒரு கேள்வியாகத்தானே கேட்கிறாய் ?''

சீலியா கலகலவென நகைத்தாள். வசந்தனும் மனம் விட்டுச் சிரித்துக் கொண்டான். 'போன்' வைக்கப்பட்டிருக்கும் ஓரத்தில் சங்கரன் மறைந்து நிற்பது தெரிந்தது. எனவே வசந்தன் மிக மெல்லிய குரலில், ''நான் அதிசயமாக போனில் பேசுகிறேன் என்பதற்கு அடையாளமாக மாணவர் கூட்டம் என்னைச் சுற்றிச் சூழ்ந்துவிடும் போல் உள்ளது. விடைபெறுகிறேன்'' என்றான்.

''மாலை லைப்ரரிக்கு வருவீர்களா?'' நாணமே கேட்டது.

''மன்னித்துக் கொள், சீலியா! மாலை அம்மாவைப் பார்க்கச் சென்று விடுவேன்.''

''தெரியாமல் கேட்டு விட்டேன்'' என்று வருந்தி மன்னிப்புக் கோரினாள் அவள்.

வசந்தன் குழலைச் சொருகி விட்டுச் சங்கரன் பேச வந்து விடுவானோ என்ற பயத்தில் வேகமாக நடந்து அறையை அடைந்து கதவைத் தாளிட்டான். நடந்து முடிந்த கணங்களில், நிகழ்ந்து முடிந்த சுவையான பேச்சுக்களைக் கண் மூடி லயித்து அசை போட்டவாறே கிடந்தான். சந்தன ஓடையான நீரோட்டத்தில் மிதந்து செல்லும்போது எத்தனை மணமயமான நினைவுகள் ! ஒரே அளவான இரு வட்டங்களை ஒன்று சேர வைக்கும் போது பிரித்துக் காண முடியாமல் பொருந்தி விடுவது போல் இந்தக் காதல் உணர்வும் எப்படி ஒன்றி விடுகிறது ! வசந்தனும் தன்னை மறந்து அந்த நினைவில் லயித்து விட்டான் !

**வி**ண்ணில் புதிதாகப் பூத்துக் கிடந்த சிவப்புத் திட்டுக்களைப் பார்த்தவாறே அறைச் சாளரத்தில் நின்ற

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்



அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.

SQUIBB

SARABHAI CHEMICALS

போது மாலைத் தபால் வந்தது. காப்பியம் காரியாலயத்திலிருந்து வந்த உறை தான். அவசரமாக அதைப் பிரித்துப் பார்த்தான் வசந்தன். பரிசளிப்பு விழா நடைபெறப்போகும் நாளைக் குறிப்பிட்டு அதை நேரில் வந்து பெற்றுக் கொள்ள வேண்டும் என்று எழுதியிருந்தது. அவனை இந்தப் பெருமை தேடி வந்தது யாரால்? சீலியாவினால்தானே? அவனைவிட அவள் எவ்வளவு மகிழ்ச்சி கொள்வாள்? ஆனால் அவன் தனது இந்த வெற்றிக்குச் சீலியா தான் காரணம் என்பதை வெளியிட முடியாதே! மனத்தில் அவளை வாயாரப் புகழ வேண்டும் என்ற துடிப்பு, ஆனால் வெளியிட முடியாத வாய்க்கட்டு, அதுவும் காதல் கட்டு!

அன்னையிடம்கூடச் சீலியாவின் உதவியைக் கூறிப் புகழ முடியாத நிலையில் வசந்தன் திக்குமுக்காடிப் போனான்.

வசந்தனுக்குப் பரிசு கிடைத்திருப்பதைக் கேட்ட செல்லம்மா, ''ஒரு வாரத்தில் பரிசளிப்பு விழா என்றாயே! அந்தப் பணம் எழுநூறும் உனக்கு வந்ததும், நீ அவரிடம் வாங்கியிருந்த கடனுக்காக உடனே திருப்பித் தந்துவிடு. பாக்கி முந்நூறையும் பிறகு தந்துவிடலாம்'' என்றாள்.

பரிசு கிடைத்ததைக்கூட அவள் பெரிதாக எண்ணவில்லை. கடனை அடைக்கத் தெய்வமே உதவியைச் செய்திருப்பதாக நம்பினாள்.

''ஓ! அப்படியே செய்து விடலாம், அம்மா!'' என்றான் வசந்தன்.

வாசற்படை ஒட்டிய சாலையில் மீனாட்சி சுந்தரத்தின் கறுப்பு நிறக் கார் வந்து நின்றது. வழக்கம்போல் டிரைவர் பழங்களைச் சுமந்து வர வசந்தனையும் செல்லம்மாவையும் பார்த்து முறுவலைச் சிந்தியவாறே வந்த மீனாட்சி சுந்தரம், ''அம்மா! கதை எழுதும் போதுகூட உங்கள் பிள்ளைக்கு உங்கள் நினைவு தான். அன்னையின் புகழை எப்படிப் பாடியிருக்கிறார், தெரியுமா? கதை எனக்கு மிகவும் பிடித்த கதை. நீங்களும் ஒரு முறை படித்துப் பாருங்களேன்.....!'' என்றார்.

''அப்படியா?'' வியந்தாள் செல்லம்மா. ''அவனுக்கு எப்போதும் என் நினைவும், கனவும்தான். எதற்கும் 'அம்மா, அம்மா' என்று உயிரை விட்டுவிடுவான்!'' என்று தனக்கே உரிய தாய்மைக் களிப்பில் கூறினாள்.

மீனாட்சி சுந்தரம் மறு நாளும் தன்னைப் பார்க்க வருவார் என்று செல்லம்மா நினைக்கவில்லை.

என்றைக்கும் இல்லாமல் அன்று வெகு நேரம் தங்கிப் பேசிக் கொண்டிருந்தார். செல்லம்மாவுக்கு அவ்வளவும் கனவா நினைவா என்றே புரியவில்லை; பலன் அன்றிரவு அவள் தூங்கவே இல்லை! (தொடரும்)

---

ஏப்ரல் 15ந் தேதி தபால் கவர், கார்டுகளின் விலை ஏறுவதை முன்னிட்டு எவ்வளவோ வேடிக்கையான சம்பவங்கள் நடந்திருக்கலாம். அதில் ஒன்று:

ஒரு 'புத்திசாலி' விலை ஏற்றத்தைச் சமாளிக்க நினைத்து 50 இன்லண்ட் கடிதங்களை 10 பைசா வீதம் வாங்கி வைத்துவிட்டார். ரூ. 2.50 சேமித்து விட்டோம் என்ற பூரிப்புடன்.

ஒரு தொழிற்சாலை அதிகாரியின் அநுபவம் இது: நாடு முழுவதும் அவர்களுடைய ஏஜெண்டுகளுக்கு அனுப்ப வேண்டிய 3000 சுற்றறிக்கைகளை ஏப்ரல் 15ந் தேதிக்குமுன்பே ஏப்ரல் 14ந் தேதி தபாலில் சேர்த்தார்களாம். ரூ. 150 இவ்விதம் மிச்சம் பிடித்திருக்கிறார்கள்.

தபால் இலாகாவுக்கு இந்த உயர்வு மூலம் 24 கோடி ரூபாய் அதிக வருமானம் கிடைக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இதில் டில்லியின் பங்கு ஒரு கோடி.

## மொரார்ஜிபாய்க்கு டிமிக்கி!



ஆதாரம்:
'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'

அனுப்பியவர்:
விஜயா சுப்பிரமணியம்



# பொம்மலாட்டம்

படாதிபதியாக வேண்டுமானல், படம் தயாரிக்க வேண்டும்; படம் தயாரிக்க வேண்டுமானல் அதற்குக் கதை என்று ஒன்று வேண்டும்; கதை என்றல் அதற்குக் கதா பாத்திரங்கள் வேண்டும்; இத்தனைக்கும் மேலே அந்தப் படத்துக்குப் பெயர் வேறு வைக்க வேண்டும்! முக்தா பிலிம்ஸின் ''பொம்மலாட்டம்'' இந்த முறையில்தான் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாத காரணத்தால், கதை விளங்கவில்லை; பாத்திரங்கள் நிறைய இருந்தும் ஒன்றுகூட மனத்தில் நிற்கவில்லை; ''பொம்மலாட்டம்'' என்று ஏன் பெயர் வைத்தார்கள் என்று தெரியவில்லை; படத்தின் நிகழ்ச்சிகள் ஒன்றுகூடப் புதிதாயில்லை.

இந்தப் படத்தில் மூன்று ஜோடிக் காதலர்கள். மாலதி — சுகுமார். கீதா—துரை. சின்னப் பொண்ணு — ஜாம்பஜார் ஜக்கு. மாலதியும், கீதாவும் கண் டாக்டர் தாமோதரத்தின் பெண்கள். ஜயலலிதாவும், குமாரி சச்சுவும் அந்தப் பாத்திரங்களை ஏற்று நடிக்கிறார்கள் என்றலே போதும். அரை குறை உடைக்கும், ஆபாச நடனங்களுக்கும் குறைவிருக்காது என்று யாவரும் ஊகித்துக் கொள்ளலாம். மாலதியும், கீதாவும், பெண்கள்தானா என்று சந்தேகம் உண்டாகி விடுகிறது. அவர்கள் இருவரும் கையையும், காலையும் தூக்கிக் கொண்டு குதிக்கும்போது அந்தச் சந்தேகம் தீர்ந்து, பெண்ணினத்தை அவமதிக்க வந்தவர்கள் என்று தெளிவாகிறது. இவர்கள் போதாக்குறைக்கு மனேரமா வந்து குதியாய்க் குதித்துக் கோணங்கி ஆட்டங்கள் ஆடுகிறார்.

திரைக்கதை வசனம் எழுதியிருப்பவர் ''சோ''. ஜாம்பஜார் ஜக்குவாக வந்து 'மதராஸ் பாஷை' பேசி முக்கியமான பாத்திரமாக வந்து நடிப்பவர் 'சோ'. அச்சசசோ!

அசட்டுச் சுகுமார் பாத்திரம் ஜெயசங்கருக்கு. அவருக்குத் திரை உலகில் நல்ல நடிகராக வரவேண்டுமென்ற ஆசையே இல்லையோ? பின் ஏன் இப்படிக் கண்ட பாத்திரங்களை ஏற்றுக் கோமாளி வேஷம் போடுகிறார்?

நாகேஷின் ஹாஸ்ய நடிப்பும் மிகையாகத் தெரிகிறது. சச்சுவோடு காதல் புரியும் கட்டங்கள் மிக மிக மட்டம். விழுந்து விழுந்து காதல் புரிந்து படத்தின் வீழ்ச்சிக்கு உதவி புரிகிறார்!

சுந்தரராஜன் வில்லன். குருடனைப்போல் நடிக்கும் இடங்களில் நன்றாக நடிக்கிறார்.

கண் டாக்டர் தாமோதரனாக வி. எஸ். ராகவன் வருகிறார். அவர் நடிப்பு இயல்பாயிருக்கிறது.

ஹாஸ்யம் என்றால் ஆபாசம் என்று யார் தான் சொன்னார்களோ! ஆணும் பெண்ணும் கட்டிப் பிடித்து ஆடுவதோடு நில்லாமல், ஒருவரையொருவர் இடித்துத் தள்ளுவது என்ன பாணியோ, என்ன சங்கடமோ!

''நல்ல நாள் பார்க்கவோ'' என்ற பாடல் நன்றாயிருக்கிறது. மற்றப் பாடல்கள் ஒரே தலைவேதனை!

ஆரம்பத்தில், நடிகர்கள் பெயர்கள் கார்ட்டூன் பாணியில் காட்டப்படும் உத்தி தமாஷாயிருக்கிறது.

''கண்டிப்பாகச் சிரிப்பு ரசிகர்களுக்கு மட்டும்'' என்று சுவரொட்டிகளில் விளம்பரம் செய்திருக்கிறார்கள். ரசிகர்களை இப்படி அவமதித்திருப்பது பெரும் குற்றம்!

முக்தா பிலிம்ஸின் 'பொம்மலாட்டம்' ஒரு முழு நீள ஏமாற்றம்!










ஆனந்தனுக்கு நினைவு திரும்பி எழுந்த போது...

பன்றி இறந்து விட்டது கந்தா, மறுபடியும் எனக்கு நீ வாழ்வளித்து விட்டாய்.

நான் இல்லை. என் உடலில்— அதற்கான வலிவு இருந்திருக்குமானால் செய்திருப்பேன். ஆனால் இந்தத்— தடவையும் உன்னைக் காப்பாற்றியது அந்த முக்காடிட்ட மர்ம உருவம்தான்.







ஓநாயின் கொடிய முகமல்லவா?
அப்படியானால் நம்மைப் பல அபாயங்களிலிருந்து காப்பாற்றியது ஓநாய் மனிதர்களிலேயே ஒருவன்தானா? நம்பமுடியவில்லையே..


அவர்கள் வியப்பு அடங்குமுன் அந்த உருவம் பேசியது.....
சீக்கிரம் இங்கிருந்து போய் விடுங்கள். என்னைத் தொட்டு விட்ட உங்களை அபாயம் தொடரும்..
போய் விடுவதா? உன்னைத் தொட்டதினால் அபாயமா? எங்களைப் பல அபா-யங்களிலிருந்து காப்பாற்றிய உன்னாலா அபாயம்? இது என்ன பேத்தல்?


மர்ம உருவம் பதில் சொல்லுமுன் மறுபடியும் மூர்ச்சையாகி விழுகிறது. ஆனந்தன் அதன் காயங்களுக்குக் கட்டுப் போட்டான்.....
கந்தா, இதோ உன் காயங்களைக் கவனிக்க வருகிறேன்..
அவசரமில்லை ஆனந்தா, நாமிருவரும் இந்த மனிதனுக்கு எவ்வளவோ கடன்பட்டிருக்கிறோம். இவனைக் காப்பாற்றுவது நம்-கடமை.


காட்டுப் பன்றியின் பற்கள் பதிந்த கந்தனின் கால் காயத்தை ஆனந்தன் சுத்தம் செய்து கொண்டிருக்கும் போது முக்காடிட்ட உருவம் மெல்ல எழுந்தது...


என் வார்த்தையைக் கேட்கவில்லை. என்னைத் தொட்டு விட்டதனால் ஓநாய்க் கடவுளின் சினத்துக்கு நீங்கள் ஆளாகி விட்டீர்கள். கந்தா உன் ரணத்தின் வலியையாவது போக்குகிறேன்.
கந்தனின் காயம்பட்ட பகுதியைத் தன் கரத்தினால் பற்றியது முக்-காட்டு உருவம்....


என்ன ஆச்சரியம்! என் கால் காயம் அப்படியே இருக்கிறது. ஆனால்- வலியே இல்லையே. என் உடலிலும் நான் இழந்த பலத்தைத் திரும்பப் பெறும் உணர்வு.. ஆஹா!
விந்தை! ஐயா, என்ன செய்தீர்கள்? மந்திரமா, மாயமா?


நான் மந்திரவாதியல்ல. பயப்படாதீர்கள். ஓநாய்த் தேவனை வழிபடுபவர்களிடம் உள்ள பல ரகசியங்களில் இதுவும் ஒன்று...
அப்படியானால் நீ..நீங்கள் ஓநாய் மனிதர்களில் ஒருவர் தானா?

- தொடரும்..






அடாது மழை
பெய்தாலும்
விடாது நடந்திடவே...
கரோனா
மழைக்கால
மிதியடிகள்!


பாலரீனா


வர்ஷ பஹார்


மொஹாக்


தாஜ் ஹவா




# விவசாயிகளுக்கு ஒரு உ(வ)ரப்பிரசாதம்

சென்னை நகரிலிருந்து சுமார் எட்டு மைல் தொலைவிலுள்ள போரூரில் மூன்று ஏக்கர் நன்செய் நிலத்தில் பேராசிரியர் எம். ஆர். பாலகிருஷ்ணன் ஓர் அரிய சாதனையை நிகழ்த்தியுள்ளார். சம்பிரதாய ரீதியில் நடவு நட்டு உரமிட்டு வளர்த்த நெற்பயிர் ஒரு பகுதி நிலத்தில்; மறுபுறத்தில் விஞ்ஞான முறையில் சாகுபடி செய்த பயிர். இரண்டுக்குமிடையேதான் எத்தனை வேறுபாடு! நாற்றுக்களை ஒன்றுக்கொன்று நான்கு அங்குல இடைவெளி விட்டு, வரிசையாக நூல் பிடித்து நடவேண்டும். ஒரு வரிசைக்கும் அடுத்த வரிசைக்கும் இடையே 6 அங்குலம் இடை வெளி. பண்டைய முறைப்படி ஒவ்வொரு குழியிலும், நான்கு ஐந்து நாற்றுக்களாக நடாமல், ஒவ்வொரு குழியிலும் ஒரே ஒரு நாற்றை மட்டுமே நடவேண்டும். தனித் தனி நாற்றாக நட்டு, அதிக அளவு நீர் தேங்கி விடாமல் கண்காணித்துக் கொள்வதன் மூலம் பயிருக்குப் பிராணவாயு அதிகமாகக் கிடைக்கிறது. பிலிப்பைன்ஸ், தாய்லாந்து முதலிய நாடுகளில் ஐ. நா.வின் ஒரு பிரிவான உணவு – விவசாய நிறுவனத்தின் நிபுணராகப் பணியாற்றி, தாம் பெற்ற அனுபவத்தைப் பயன்படுத்தி, இவர் விளைவித்துள்ள நெற்பயிர் செழுமையாக வளர்ந்துள்ளது. ஒரு வாரத்தில் அறுவடைக்குத் தயாராக இருக்கும் பொன்னிறக் கதிர்கள் கண்ணுக்கு விருந்தாக உள்ளன. புராதன முறைப்படி சாகுபடி செய்யப்பட்ட நெற்பயிர்களுக்கு மாறாக, அறுவடைக்குத் தயாராக உள்ள இப்பயிர் தலை சாயவேயில்லை! பயிரின் தண்டு அவ்வளவு உறுதியாக உள்ளது. பயிரிடும் முறையில் புதுமையைப் புகுத்தியிருப்பதால் மட்டும் இச்சாதனை நிகழ்ந்து விடவில்லை. இவர் பயன்படுத்தியுள்ள கூட்டு உரம் முக்கிய காரணமாகும். பயிரின் வளர்ச்சிக்குத் தேவையான நைட்ரஜன், பாஸ்பரம், பொட்டாஷியம் சத்துக்கள் உரிய அளவில் சேர்க்கப்பட்ட ரசாயனக் கூட்டு, இந்தக் கூட்டு உரம். கலப்பு உரத்தை விட இது சாலச் சிறந்தது என்பது குறிப்பிடத் தக்கது. உரத்துடன் சாம்பல், மண் முதலியவற்றைக் கலந்து மோசடி செய்வதுபோல் இந்தக் கூட்டு உரத்தில் கலப்படம் செய்வது எளிதன்று. கலப்பு உரத்தை விட இது விலையும் கூடுதலன்று. இக்கூட்டு உரத்தின் சிறப்பினை விவசாயிகளுக்கு விளக்கி விளைச்சலைப் பெருக்க வகை செய்யும் பொருட்டு அமெரிக்காவைச் சேர்ந்த இரசாயன உர நிறுவனமாகிய கோஸ்டல் இரசாயன கார்ப்பரேஷன் சென்னை ராயப்பேட்டையில் (11, ஸ்ரீ கிருஷ்ணாபுரம் தெரு) ஒரு நிலையம் அமைத்துள்ளது. மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள கேம்பியாவில் விவசாயத்துறை வல்லுநராகப் பணியாற்றி அநுபவம் பெற்ற திரு கே. எஸ். இராமசாமி இந்த நிறுவனத்தின் நிர்வாகப் பொறுப்பேற்றுள்ளார். கேம்பியாவில் இவர் இரசாயனக் கூட்டு உரத்தைப் பயன்படுத்தி வெற்றி கண்டுள்ளார். தஞ்சை, செங்கற்பட்டு முதலிய பல மாவட்டங்களில் சில மாதிரிப் பண்ணைகளை நிறுவி, கூட்டு உரத்தின் உயர்வினை விவசாயிகளுக்கு விளக்கும் முயற்சியில் இவர் ஈடுபட்டுள்ளார். பசுந்தாள் உரத்தையும் இரசாயன உரங்களையும் சீராகக் கலந்து பயன்படுத்தினால் நெற்பயிர் அமோகமாக விளையும் என்பதை வலியுறுத்துகிறார். இந்தத் திட்டத்தைச் செயலாக்க இந்நிறுவனம் இரசாயன உரங்களை இலவசமாக வழங்குகிறது. எந்த விதமான இலாப நோக்கும் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது: விவசாயத் துறையில் விஞ்ஞான ரீதியில் இவர் பெற்றுள்ள 40 வருட அனுபவத்தை நமது விவசாயிகள் பயன்படுத்திக் கொள்வதன் மூலம், உணவுப் பிரச்னையை இல்லையாகச் செய்து, தமிழகத்துக்குப் பெருமை தேடலாமே! —ரா. பா.

## அத்தியாயம் 26

# 'மணிமரத்தாள் பத்தை'

தமிழர்களாகிய நம்மால் மூன்று சிங்கங்களை மறக்கவே முடியாது. அவற்றில் இலக்கியச் சிங்கங்கள் இரண்டு. இசைச் சிங்கம் ஒன்று.

முதலாவது 'மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும் சீரிய சிங்கம்'. ஆண்டாளைப் பாடவைத்த அந்தச் சிங்கம், 'தீ விழித்து, வேரி மயிர்பொங்க'த் தமிழுக்கே உரிய கம்பீரமான நடையில் வருவதைப் படித்தால் பள்ளியெழுந்து வரும் கண்ணனையே அதில் காண்போம்.

இரண்டாவது கவிச் சக்கரவர்த்தி கம்பர் பாடிய, ''சிரித்தது செங்கட் சீயம்'' என்ற சொற்றொடர். இதில் நரஸிம்மத்தின் நாத கர்ஜனையே கேட்கிறது.

மூன்றாவதுதான் இசைச் சிங்கம். இது உடையார் பாளையம் காட்டில் சுமார் 125 ஆண்டுகளுக்குமுன் உலவி வந்தது. கன்னித் தமிழும் கர்நாடக இசையும் உள்ள வரையில் இதன் கர்ஜனை நம் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருக்கும்.

உடையார் பாளையத்தின் ''ஊரும் பேரும் விளங்க'' 'வேலவரே! உமைத் தேடி ஒரு மடந்தை' என்பது போன்ற பல அரிய கீர்த்தனைகளைப் பாடிய கனம் கிருஷ்ணய்யர்தான் அந்தச் சிங்கம். அவரை ஒரு சமயம் சில வித்துவான்கள் ''எத்தனையோ பெரிய சமஸ்தானங்கள் இருக்கையில் ஏன் இந்த உடையார் பாளையம் காட்டில் சஞ்சரிக்கிறீர்கள்?'' என்றனராம்.

அதற்கு அவர், ''கனகாபிஷேகம் எனக்குத் தேவையில்லை. கச்சிரங்கன் சிரக்கம்பம் ஒன்றே போதும்'' என்று அந்த ஊரையாளும் வன்னிய குல மன்னரைப் புகழ்ந்து பாடினாராம்.

# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு





இவ்வாறு பாட்டுக்கும் காட்டுக்கும் பேர்பெற்றது உடையார் பாளையம். அவ்வூரைச் சுற்றி ஒரு பெரும் அடவி உண்டு. அதில் உள்ள மரங்கள் கனம் கிருஷ்ணய்யரின் இசையைப்போல் ஆழமாக வேரூன்றியவை. ''மா பழுக்கும் சோலை'' என்ற பாடலைப்போல் மா, பலா, நெல்லி, விளா, நாவல் என்னும் கனி மரங்கள் நிரம்பியவை. அவரது ராக

ஆலாபனம் போன்ற தெளிந்த நீரோடைகளும், திரவல் ஸ்வரம் போன்ற பல அருவிகளும் உடையவை. அவர் மேல் பொறுமை கொண்டவர் மனம் போல் இருளும் சூழ்ந்தவை.

அந்தக் காட்டில் ஞானிகளும் இருந்தார்கள். கள்வர்களும் திரிந்தார்கள். மயிலும் பதம் எடுத்து ஆடியது. பாம்புகளும் படமெடுத்து ஆடின. உயர்ந்த தேன் கூடுகளிலிருந்து தேன் தாரை தாரையாகச் சொட்டியது. எறும்புகள் சாரி சாரியாக ஓடின. இவற்றை ஒரே வாயில் விழுங்கச் சாரைப் பாம்புகளும் ஊர்ந்தன. அதன் நடுவே ஒரு பகுதியில் எப்பொழுதும் கணகண வென்று மணி ஓசை முழங்கிக்கொண்டே இருக்கும். ஆலயத்தில் ஆறுகால பூசைதானே உண்டு? இங்கு அறுபது நாழிகையும் பூசையா என்ற ஐயம்கூட ஏற்படும். அப்படி அடித்த மணிகள் கோயில் மணிகள் அல்ல. கொம்பில் இருந்த மணிகள்தான். அங்கு வானூற ஓங்கிய இரண்டு கல்லால விருக்ஷங்களில் யாரோ எக்காலத்திலோ பல வெண்கல மணிகளைக் கட்டியிருந்தார்கள். மரம் உயர்ந்த போது மணிகளும் உயரத்தில் சென்று காற்றடித்த போதெல்லாம் கலகலவென்று ஒலித்தன. இதனால் அந்த இடத்தையும், அதன் உட்புறமிருந்த கோயிலையும் ''மணிமரத்தான் பத்தை'' என்று குடி மக்கள் கூறி வந்தார்கள். அந்தப் பத்தைக்குள் ஒரு பாழடைந்த காளி கோயில். அதிலிருந்த காளியின் கனக சிலையை முகலாயர்கள் படையெடுப்பின் போது யாரோ எடுத்து மண்ணுக்குள் புதைத்து விட்டார்கள். எங்கு புதைத்தோம் என்று சொல்லாமலே அந்த இரகசியத்தோடு அவர்களும் புதைந்து போய் விட்டார்கள். சிலையில்லாத கோயிலும் சீவன் இல்லாத உடம்பும் சிதைவது போல அந்தக் கோயிலும் சிதிலமாகிக் கிடந்தது. அந்தப் பாழடைந்த கோயிலின் திரு மதிலுக்குள் அடிக்கடி குதிரைகளின் குளம்போசையும், தீவட்டிகளின் வெளிச்சமும், பேய் இரைச்சலும் கேட்பதுண்டு. 'காளி ஊரைச் சுற்றி வருகிறாள். கொள்ளி வாய்ப் பிசாசுகள் கூட வருகின்றன. பேய்கள் கட்டியம் பாடுகின்றன' என்று விஷயம் தெரிந்த கிழவர்கள் சொல்லியதால் அந்தப் பத்தைப் பக்கமே யாரும் வருவதில்லை. காளிக்கு உலக்கைச் சத்தம் கேட்கக் கூடாது என்ற அச்சத்தால் மணிச் சத்தம் கேட்காத தொலைவுக்கு மக்கள் ஓடிவிட்டார்கள்.

ஒரு நாள் நள்ளிரவில் காளி கோயிலுக்குள் சுமார் ஐம்பது குதிரைகள் கட்டப்பட்டிருந்தன. மற்றொரு மூலையிலே வெட்டரிவாள், கை அரிவாள், வளை தடி, வல்லயம், ஈட்டி, வேல் சமுதாடு, பாலா முதலான ஆயுதங்கள் குவிக்கப்பட்டிருந்தன. கோயிலின் பின்புறத்தில் மடைப்பள்ளி இருந்த இடத்தில் சில பெண்கள் அன்று வேட்டையாடி வந்த மான்களையும் முயல்களையும் சமையல் செய்து கொண்டிருந்தார்கள். மற்றொருபுறத்தில் பெரிய சால் ஒன்றில் வெந்நீர் கொதித்துக் கொண்டிருந்தது. அதன் அருகில் சுமார் நாற்பது வயது மதிக்கத்தக்க பணிப்பெண் ஒருத்தி நன்கு வேக வைத்த சீயக்காய்களைப் பிசைந்து கரைத்துக் கொண்டு முல்லை வேந்தன் நீராட வருவதற்காகக் காத்துக் கொண்டிருந்தாள். முல்லைவேந்தன் ஒரு கல் ஆசனத்தின் மீது அமர்ந்திருந்தான். அவனுக்கு இரு பெண்கள் சந்தனுதித் தைலத்தை உடம்பில் தேய்த்து உடம்பைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தார்கள். அவனது தோள்கள் கடைந்தெடுத்த கர்லாக் கட்டைகள் போல் விளங்கின. வளைந்த நாசியும், குழி விழுந்த கண்களும், முறுக்கிவிட்ட மீசையும், வெற்றிலைக் காவி ஒழுகும் கடைவாயும், பரட்டைத் தலையும், அவனைப் பகலில் பார்ப்பவர்களே பயந்து ஓடும் வண்ணம் அமைந்திருந்தன. அவன் தனது மார்பில் இரத்தினங்கள் இழைத்த மாங்காய் மாலையும் பதக்கமும் அணிந்திருந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்துக்குள் தான் இருக்கும். ஆயினும் வயதுக்கு மீறிய வளர்ச்சியும், அதையும் மீறிய வஞ்சமும் அவனிடம் குடிகொண்டிருந்தன. அவன் எதிரில் நெற்றியில் வடுக்கள் நிறைந்த ஒருவன் கைகட்டி நின்று கொண்டிருந்தான். அவனைப் பார்க்கும்போதெல்லாம் முல்லை வேந்தன் பல்லை நறநறவென்று கடித்தான். ''மடையா! நம் ஆளில் ஒருவனைக் கொண்டு வா என்று உன்னை அனுப்பினால் கூடப் பதினறு பேர்களைப் பலி கொடுத்துவிட்டு வந்திருக்கிறாய். கோழை!'' என்று தன் கையில் இருந்த சுண்ணாம்புக் கரண்டகத்தைத் தூக்கித் தரையின் மீது அடித்தான் முல்லை வேந்தன்.

''மன்னிக்க வேண்டும், வேந்தே! ஊரைக் கொளுத்தி அந்தக் குழப்பத்தில் சிறைச்சாலைக்குள் புகுந்து பூசாரி வேஷத்தில் நாம் அனுப்பிய ஆளைக் கொண்டு வருவது என்றுதான் திட்டமிட்டிருந்தேன். எதிர்பாராதவிதமாக அந்தப் பிரதாபசிம்மர் தீயில் குதித்துப் போரிடுவார் என்று எனக்குத் தெரியுமா?''

3-23-6

காலை—நடுப்பகல்—அல்லது இரவு



எச்சமயத்திலும், பகட்டான **கடாவ்** வாயில்களில்

ஃபாஷனின் சின்னமாகத் திகழ்வீர்கள்

**தி கடாவ் மாகன்ஜி ஸ்பின்னிங் அண்ட் வீவிங் கோ. லிட்.,**

மில்கள்: ஹெயின்ஸ் ரோடு, பைகுல்லா, பம்பாய் - 27. மொத்த வியாபார ஜவுளிக்கடை: கோவிந்த் சௌக், மூல்ஜி ஜேதா மார்க்கெட், பம்பாய்-2. சில்லறை விற்பனைக் கடைகள்: 216, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை - 1 கட்டாவ் வாயில்ஸ், 2/188, மவுண்ட் ரோடு, ஆயிரம்விளக்கு, சென்னை-6

SISTA'S-KMS-389 A Tam

''பிரதாபசிம்மர்! அவன் பேரை மறுமுறை என் காது கேட்கச் சொல்லாதே. அவனுக்கு இளவரசுப் பட்டம், எனக்குக் காட்டுராஜாப் பட்டம்! இன்னும் ஒரே மாதத்தில் தஞ்சைக் கோட்டையில் நம் கொடி பறக்கவேண்டும். உன்னைப் போன்ற உபயோக மற்றவர்களை மந்திரியாக வைத்துக் கொண்டால் அந்த எண்ணம் உருப்பட்டாற் போலத்தான். கல்லணையை வெட்டச் சொன்னால் வடவாறை வெட்டுகிறாய். கையாலாகாதவன்.''

''வேந்தே! துக்கோஜி அரசர் இரண்டு நாட்களுக்கு முன்புதான் கல்லணையில் பலத்த காவல் போட்டிருக்கிறார். நம்மைக் கூட்டத்தோடு பிடிக்க நாற்புறமும் ஒற்றர்களை நிறுத்தியிருக்கிறார். இதைத் தவிர பேஷ்வா ஆனந்தராயன் தங்கள் தலைக்கு விலை வைத்திருக்கிறான்.'' இந்த வார்த்தையைக் கேட்டவுடன் வெந்நீர்ச் சாலினருகிலிருந்த மாதின் முகம் சரேலென்று வெளுத்தது. வெந்நீரை விளாவிக் கொண்டே அவர்கள் பேசுவதையெல்லாம் மிகுந்த கவலையுடன் கேட்டாள்.

முல்லைவேந்தன் கடகடவென்று சிரித்தான். ''என் தலைக்கு விலை. அவன் என்ன விலை வைப்பது? மாயூரம், கும்பகோணம், மன்னார்குடி, பட்டுக்கோட்டை, திருவையாறு ஆகிய ஐந்து சுபாக்களில் இரண்டரை சுபாக்களைப் பிரித்துக் கொடுக்கட்டும். அதுதான் என் தலைக்கு விலை. இனி நாள்தோறும் ஆனிரைகள் கவரப்பட வேண்டும். கரும்புச் சோலைகள் கனல் பற்றி எரிய வேண்டும். சம்பா வயல் தண்ணீரில் மூழ்க வேண்டும். கொள்ளை, கொலை, தீ வைப்பு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பகுதியிலும் நடந்து கொண்டே இருக்க வேண்டும். 'போதும் துக்கோஜியின் ஆட்சி' என்று குடிகள் மனம் பொங்கி எழ வேண்டும். அத்தனை மக்களும் நம் பக்கம் ஆகிவிடுவார்கள். பின் அரசு என்னுடையது. இனி நானே முன்னின்று குழப்பங்களை நடத்துவது என்று தீர்மானித்து விட்டேன்.''

''வேந்தே! வேண்டாம். அது ஆபத்து. தங்களை மக்கள் அவதார புருஷராகக் கருதுகிறார்கள். அவர்களை விடுவிக்க வந்த தெய்வம் என்று எண்ணுகிறார்கள்.''

''தெய்வம்! தெய்வமே அரசியலுக்கு வந்தாலும் அதுவும் சூழ்ச்சிகளில் ஆரம்பித்து விடும். மாமா என்னைத் தடுக்காதே. போதும் உன்னை நம்பியது'' என்று ஆத்திரத்தோடு எழுந்தான் முல்லைவேந்தன்.

''வேந்தே! வேண்டாம்! தாங்கள் மறைவாகவே இருக்க வேண்டும். வெறும் மனிதன்தான் என்று புரிந்தால் காட்டிக் கொடுப்பார்கள். அல்லது காசுக்கு ஆசைப்பட்டுத் தங்கள் தலையையே வெட்டிக் கொண்டு போய் ஆனந்தராவின் காலடியில் வைத்தாலும் வைத்து விடுவார்கள். நான் இருக்கிறேன். நமது ஆட்கள் அரண்மனையில் இருக்கிறார்கள். கட்டுண்டோம். பொறுத்திருப்போம். காலம் மாறும். தீர்க்கமாக ஆலோசனை செய்யாமல் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வந்து இத்தனை நாள் வரை தேவியார் பட்ட பாட்டையெல்லாம் வீணாக்கி விடாதீர்கள்!'' என்று அவன் காலில் விழுந்து இரு கால்களையும் பற்றிக் கொண்டான் வடுமூஞ்சிக்காரன்.

''இன்னும் ஒரு ஆண்டு தவணை கொடுக்கிறேன். அதற்குள் தஞ்சை அரியணையில் நாம் அமர வேண்டும்'' என்று கோபத்துடன் கூறித் தன் காலால் அவனை எத்திவிட்டு நீராட வந்தான் முல்லைவேந்தன்.

வடுமூஞ்சிக்காரன் எழுந்து கோயிலின் பின்புறம் நந்தவனத்தின் நடுவே இருந்த மாலை சூட்டி மண்டபத்துக்குச் சென்று அங்கு ஒரு விசுப்பலகையின் மீது அமர்ந்திருந்த பெண் துறவியின் அருகில் சென்றான்.

''என்ன தம்பி! வருத்தத்தோடு நிற்கிறாய்?'' என்று கேட்டாள் அவள்.

''அரசர் அவசரப்படுகிறார். நீங்களும், நானும் பட்டபாடுகள் அவருக்குத் தெரியவில்லை. அவரே தஞ்சைக்குப் போகப் போகிறாராம். அவரே குழப்பங்களை நடத்தப் போகிறாராம்.''

அந்த மாது சிரித்தாள். ''பாவம். அதுதான் அரியணையின் மயக்கம், வெண்ணெய் திரளும் நேரத்தில் தாழியை உடைத்து விடுவானோ என்று கவலைப்படுகிறாய். கவலைப்படாதே! நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்று ஆறுதல் கூறினாள் அப்பெண்மணி.

அவளைச் சுற்றி ஏராளமான கொள்ளைப் பொருள்கள் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டு இருந்தன. ஒருபுறத்தில் ஒரு புலித் தோலாசனமும், அதன் பக்கத்தில் ஒரு விபூதித் தட்டும், அதன் மேல் ஒரு பிரம்பும், ஒரு கட்டு வேப்பிலையும் இருந்தன. காவி உடை உடுத்த இரு பணிப் பெண்கள் அவளுடைய ஏவலுக்காகக் கை கட்டி நின்றனர். அவளும் துறவியைப் போலத் தலையை எடுத்துக் கட்டிக் கழுத்தில் பாசி மாலைகளை அணிந்திருந்தாள். நாள்தோறும் குதிரை மீது நாலைந்து கிராமங்களுக்குச் சென்று, பேய் ஓட்டுவது, மந்திரிப்பது போன்ற செயல்களைச் செய்து

''கைலாசபதி அவதாரம் செய்திருக்கிறார். கலியின் கொடுமைகளைத் தீர்க்கப் போகிறார். அவரே காட்டு ராஜா'' என்று பிரசாரம் செய்து ஒன்றுமறியாத மக்களை வசப்படுத்தும் பணியில் அவள் ஈடுபட்டிருந்தாள். கௌமாஜியைத் தன்னருகில் அமரவைத்து. ''அவன் சிறு பிள்ளைதானே! என்ன தெரியும்! நீ எனக்காக ஏற்றுக்கொண்ட கஷ்டங்களையெல்லாம் அவன் அறிவானா? வாலிபம்! காட்டிலே புலிபோல வளர்ந்து விட்டான். அவனை அடக்குவதற்குத் தக்க ஒரு பெண்ணை...'' என்று கௌமாஜியின் காதில் எதையோ சொன்னாள் அம்மாது. கௌமாஜி சிரித்தான்.

''அவன் கெட்ட கேட்டிற்கு அது ஒன்றுதான் குறைவு. என்னையே எட்டி உதைக்கிறான். அவளை என்ன செய்வானோ?'' என்று சொல்லிவிட்டுத் திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவன்போல் ஒருகணம் யோசித்தான். அப்பெண்மணியின் காதில் ரகசியமாக, ''ஒருத்தி இருக்கிறாள்! நான் பார்த்தேன். அஹா! என்ன அழகு!'' என்றான்.

அவள் முகம் மலர்ந்தது.

ஒரு முக்காலியின் மேல் முல்லைவேந்தன் அமர்ந்திருந்தான். அவன் தலையில் சீயக்காயை வைத்து நன்கு தேய்த்துவிட்டு விளாவிய வெந்நீரால் நீராட்டினாள் சாலுக்கு அருகில் நின்ற பணிப்பெண். அவன் உடம்பில் சீயக்காய் தேய்க்கும்போது அவளை அறியாமல் அவள் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் வருவதைக் கவனித்தான் முல்லை வேந்தன்.

''ஏ குப்பி! ஏன் அழுகிறே?''

''ஒண்ணுமில்லே, மகாராசா!''

''நீ தேய்த்தது போதும்!'' என்று ஆத்திரத்துடன் கூறி அவள் கையிலிருந்த செம்பைப் பிடுங்கிச் சாலிலிருந்த வெந்நீரை அவசரமாக எடுத்து மேலே ஊற்றப் போனான் அவன். ''ஐயோ! கொதிக்குது'' என்று குப்பி செம்பைப் பறித்தாள்.

''குடு, என்னிடம்!'' என்று சொல்லிக் கொண்டே அவன் பறித்த வேகத்தில் செம்புத் தண்ணீர் முழுவதும் அவள் மேல் கொட்டியது. ''ஆ'' என்று அலறினாள் அவள். ''மகாராசா! உங்க காலைப் புடிச்சுக் கேட்டுக்கறேன். இதெல்லாம் வேண்டாமுங்க. விட்டுடுங்க. உசிருக்கு மேலே பதவி இல்லே. அனந்தராயர் உங்க தலையைக் கொண்டு போயிட்டாருனா அப்புறம் யாரு வந்து ஆளுறது? குடுத்து வைக்கவேண்ணு நினைச்சுக்குங்க. அரண்மனைக் கோழி முட்டை அம்மியை உடைக்கும். இப்ப உங்க தலைக்கே வைத்திருக்கிறார்களாமே? என் ராசா!'' என்று அவன் கால்களைப் பிடித்துக் கொண்டு கதறினாள் அந்தப் பணிப்பெண்.

''சீ, போ! அழுக்கெடுக்கும் வேலைக்காரி அரசனுக்குப் புத்தி சொல்லுவதோ?'' என்று அவள் முகத்தில் எட்டி உதைத்தான் முல்லைவேந்தன். அவள் கீழே விழுந்தாள். மறுபடியும் எழுந்தாள். ''நான் ஒண்ணும் சொல்லலே ராசா! நான் ஒண்ணும் சொல்லலே. நீ உதைச்சாலும் உன்னை விட்டுப் போகமாட்டேன் ராசா!'' என்று எட்டி உதைத்த காலை முத்தமிட்டாள்.

''எம் மேலே கோவிச்சுக்கிட்டு எண்ணெய் உடம்போடே எழுந்திருக்காதீங்க!'' என்று சொல்லிக் கொண்டே சீயக்காயை அவன் உடம்பில் தேய்த்தாள்.

''இனி மேல் நீ எனக்குப் புத்தி சொல்லக் கூடாது. நாளை முதற் கொண்டு எம்முகத்திலே முழிக்காதே'' என்றான் அவன்.

''ஐயோ, மகாராசா! அதை மாத்திரம் சொல்லாதீங்க. நீங்க அடியுங்க. கொல்லுங்க. ஒரு நாளைக்கு எட்டு தடவை எட்டி உதையுங்க. இந்த வேலைக்காரியை வெளியே போ என்று மட்டும் சொல்லாதீங்க! உங்க உசிர் மேலே உள்ள அக்கறை. உங்களுக்கு ஒரு ஆபத்தும் வந்திடக் கூடாதேங்கிற கவலை.''

''வேஷம். பொய். என் அன்னைக்கில்லாத கவலை உனக்கென்ன வந்தது?'' என்று அவளைப் புறங்கையால் தள்ளினான் முல்லைவேந்தன்.

இரும்பு போன்ற அவனது கைபட்டு அவளது பல்லிலிருந்து ரத்தம் ஒழுகியது.

''ஆ! ரத்தக்குறி! என் ராசா! உங்களுக்கு ஒரு ஆபத்தும் வரக் கூடாது?'' என்று சொல்லிக்கொண்டே அவனது உடம்பைத் துவட்டினாள். உதைக்க உதைக்கக் காலைச் சுற்றி வரும் நாய்போல அவள் நடந்து கொண்டாள். இதற்குள் பணிப் பெண்கள் பக்குவமாகச் சமையல் செய்யப்பட்டிருந்த பொருள்களை இலையில் பரிமாறித் தயாராகக் காத்து இருந்தார்கள். முல்லைவேந்தன் அங்கு வந்து வேறு ஆடை உடுத்துக் கொண்டு இலைக்கு முன் அமர்ந்தான். இதற்குள் நந்தவனத்திலிருந்து அவனுடைய அன்னை அவனுக்கென்றே தனியாகத் தயாரித்த மதுவை ஒரு வெள்ளிச் செம்பு நிறைய அனுப்பிவைத்தாள். அவன் கோபம் தீரக் குடித்தான். உண்ண ஆரம்பித்

தான். அப்பொழுது அந்த வேலைக்காரப்பெண் அவன் சரியாகச்சாப்பிடத் தெரியாமல் மது வெறியில் அலங்கோலமாக உண்ணுவதை வருத்தத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள்.

அந்த இரவில் யோகினி வேஷத்தில் இருக்கும் அன்னையும் கள்வர் தலைவனும் காடாந்தகாரமாக உறங்கினார்கள். ஆனால் வேலைக்காரி மட்டும் விழித்திருந்தாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. ''தலைக்கு விலை, தலைக்கு விலை. மாரியம்மா காப்பாற்று'' என்று கண்ணீர் வடித்தபடி இருந்தாள்.

# வாழ்க்கைச் சித்திரம்.10




உலகில் பசிக்குச் சாப்பிடுகிறவர்கள் ஒரு சாதி. ருசிக்குச் சாப்பிடுகிறவர்கள் மற்றொரு சாதி. குயிலி முதல் வகுப்பைச் சேர்ந்தவள். ரங்கமன்னார் சித்திரசாலையில் புகுந்தது முதலே அவளது வாழ்க்கை முறை மாறிவிட்டது. வேளைக்குச் சாப்பாடு, விதம் விதமான ஆடைகள், நாள்தோறும் நீராடல், நறுமணத் தைலம், நெற்றியில் திலகம், கண்ணுக்கு மை என்று புதிய அதிர்ஷ்டமே அவளுக்கு வந்து விட்டது. அதிர்ஷ்டம் வந்தால் சிலருக்குக் கண் பார்வைகூட மங்கிவிடும். முன்பு பழகிய நண்பர்களின் முகமே தெரியாது. ஆனால் குயிலி அப்படி இருக்கவில்லை. அவள் வேண்டுகோளின்படி அவளுடைய பரிவாரம் முழுவதும் ரங்கமன்னாரின் விருந்தினரானார்கள். அவர் தோட்டத்தில் உள்ள மா, பலா, கொய்யா மரங்கள் எல்லாம் மொட்டை ஆயின. சித்திரம் எழுதுவதற்காகத் திரை முன் நிற்கும் நேரங்களைத் தவிர மீதி நேரங்களைக் குயிலி மரக் கிளைகளிலேயே போக்கினாள். ரங்கமன்னார் குழந்தை இல்லாதவர். ஏழைக் குழந்தைகள் எல்லாம் அவர் குழந்தைகள் ஆனார்கள். பாட்டும் கூத்தும் கும்மாளமுமாக அந்த வீடே இரண்டுபட்டது.

குயிலி ஒரு மேதாவி. பெண்களுக்குச் சமையல் கலை தானே வருவது போல அவளுக்கு இரண்டே நாளில் வர்ணக் கலவை கைவந்துவிட்டது. தூரிகையில் வண்ணத்தைத் தோய்த்துக் கொண்டு செவ்வானத்தைச் சுவரில் தீட்ட ஆரம்பித்துவிட்டாள். அவர் வீட்டுச் சுவர்களில் எல்லாம் குயிலியின் கைவரிசை விளையாடி இருந்தது.

''அடே! நான் உன்னைப் போல் படம் போடவா?'' என்று சின்னத்தம்பியைச் சுவரில் எழுதினாள். அவனோ ''ஏன் என்னைக் குரங்கு போல் போட்டாய்?'' என்று கர்ஜித்தான்.

''என்னைப் படம் மட்டும் போடாதே. அது ஆயுசைக் குறைச்சுடும்'' என்று ஓடினான் முந்திரிக்கொட்டை. பாவம். செத்துப் பிழைத்தவன் அல்லவா அவன்!

'இந்தப் பையன்கள் ஒருவரையும் படத்தில் தீட்டவேண்டாம். வேறு யாரைத் தீட்டுவது? மாமனைப் போட்டால் என்ன? அது எப்பவும் தள்ளாடிட்டே இருக்குமே. படமே ஆடாதோ. வேறு யாரைப் போடுவது?' என்று யோசித்தாள் குயிலி. குபீரென்று சிரித்தாள். 'இதற்கு ஏன் இவ்வளவு நேரம் யோசிக்க வேண்டும்? அந்த முகம் தான் இருக்கிறதே! அது அழகு முகம். பழகிய பின்பல்லவா எழுதவேண்டும்?... ஏன். அந்த அவல முகத்தை எழுதுவோமே? . நெஞ்சை விட்டு நீங்காத முகம். அன்று இரவில் கையில் விளக்குடன் கண்ட முகம். பேய் போல கம்மைப் பார்த்தானே. அவன் முகத்தைப் போட்டால் என்ன?' தூரிகையை வண்ணத்தில் தோய்த்தாள் காரிகை. சுவரிலே இரண்டு மீசைகள் பயங்கரமாக முளைத்தன. அதுமட்டுமா? எதிர்ப்புறச் சுவரின் மறைவிலிருந்து இரண்டு பயங்கரமான கண்கள் அவளைப் பார்த்தன.

(தொடரும்)

நினைவிருக்கிறதா?

# அர்பத்நட் பாங்கி 'அரோஹரா'!



'நந்தலால்'

**1906**ம் ஆண்டு அக்டோபர் 20ந் தேதி சென்னையில் 'அர்பத்நட்' பாங்கி மூடப்பட்டது. கோடீசுவரர்களும் சாமான்ய அந்தஸ்துள்ளவர்களும் தங்கள் சேமிப்புப் பணத்தையெல்லாம் அந்தப் பாங்கியில்தான் போட்டிருந்தார்கள். இப்பாங்கி திவாலானதினால் மனமுடைந்தவர்கள் அநேகர்.

இந்தப் பாங்கி சுமார் நூறு ஆண்டுகளாகப் பணம் கொடுக்கல் வாங்கல் செய்து வந்திருந்தது. சென்னையில் அக்காலத்தில் பிரபலமாக விளங்கியது அந்தப் பாங்கிதான். இதன் முக்கிய பங்காளிகளில் ஒருவராகிய அர்பத்நட் மிகச் செல்வாக்குப் படைத்தவர். சென்னையில் கவர்னருக்கு அடுத்தபடியாக மக்கள் அவருக்கு மரியாதை செய்வார்கள்.

லண்டனில் இந்தப் பாங்கியின் கிளைக் காரியாலயம் ஒன்று இருந்தது. அங்கே பங்காளியாக இருந்த மக்பாடியன் திடீரென்று தற்கொலை செய்து கொண்டார். சீமை பங்காளி இறந்ததினால் பாங்கியின் அங்குள்ள நிலவரம் தெரிய முடியாமல் போய்விட்டது. அன்றைய தினமே 'பாங்கி திவாலானது' என்று தீர்மானிக்கக் கோர்ட்டில் மனு தாக்கல் செய்யப்பட்டது.

தம் சொந்தப் பொறுப்பில் அர்பத்நட் ஓர் அறிக்கையைப் பத்திரிகைகளில் பிரசுரித்தார். வெளியான விவரம் இதுதான். முதல் பங்காளியான மக்பாடியன் ஒரு சல்லிக் காசு கூட முதல் போடவில்லை. அர்பத்நட்டும் முதல் எதுவும் போடவில்லை. பாங்கியின் வரவு மொத்தம் ரூ. 2771-1 லட்சம். ஆனால் கையிருப்பு ரூ. 76 லட்சமே. மற்ற தொகை போன இடம் தெரியவில்லை.

இந்தத் திவாலினால் மிகப் பெரிதும் பாதிக்கப்பட்டவர் 'விவேகசிந்தாமணி' என்ற அந்தக்காலப் பிரபல தமிழ் மாதப் பத்திரிகையை நடத்தி வந்த சி. வி. சுவாமிநாதய்யர். இவர் போட்ட பணத்துக்கு ஒரு ரூபாய்க்கு ஒரு தம்பிடி வீதம் சுமார் ரூ. 500 கடைசி டிவிடெண்டாக வந்தது என்றால் இவர் இழந்தது எவ்வளவு பெரிய தொகை என்பது தெரியவரும். அர்பத்நட்டை இலேசில் விட்டுவிடக் கூடாது என்று ஸ்ரீ வி. கிருஷ்ணசாமி அய்யரைத் தூண்டியவர் இவரே.

அர்பத்நட் செய்த தீங்கு சாமானியமானதன்று. அவர் எப்படியும் தண்டிக்கப்பட வேண்டுமென்பதை ஸ்ரீ கிருஷ்ணசாமி அய்யர் உணர்ந்தார். அக்காலத்தில் வக்கீலாக 'சன்னது' பெற்றவர்கள் இன்ஸால்வென்ஸி நடவடிக்கைகளில் ஆஜராவது சட்டரீதியாக முடியாது. பாரிஸ்டர்களால் மட்டுமே சாத்தியம். பணம் போட்டவர்களின் வேண்டுகோளின்பேரில் கிருஷ்ணஸ்வாமி அய்யர் ஆஜரானார்.

ஜட்ஜ் மணி அய்யரின் முன்னிலையில் 1907 மார்ச் 25ந் தேதி விசாரணை ஆரம்பமானது. நேப்பியர் என்கிற பாரிஸ்டர் அர்பத்நட்டுக்கு வாதித்தார். கிருஷ்ணஸ்வாமி அய்யர் வக்கீல் அங்கியைக் களைந்துவிட்டுச் சாமானியராக விசாரணையைத் தொடங்கினார். கிருஷ்ணஸ்வாமி அய்யரின் குறுக்கு விசாரணையைப் புகழாதவர்கள் இல்லை.



அர்பத்நட் குற்றவாளியே என்று தீர்மானித்து அவரை செஷன்ஸுக்கு அனுப்பினார் ஜட்ஜ் மணி அய்யர். அங்கு நீதிபதி அர்னல்ட்வைட் அர்பத்நட்டுக்கு 18 மாத சிறைத் தண்டனை விதித்தார்.

பொது மக்களுக்கு நம்பிக்கையான ஒரு பாங்கி வேண்டும் என்று கிருஷ்ணஸ்வாமி அய்யர் கருதி 1907 மார்ச் 5ந் தேதி இந்தியன் பாங்கை ரிஜிஸ்தர் செய்தார். இவ்வாண்டு இந்தப் பாங்கி வைர விழாக் கொண்டாடுகிறது.



# ஆதாரம்

**கை,** கால் எதையுமே அசைக்காமல் அப்படியே சலனமில்லாமல் கிடந்தான் பாகீரதி. இமைகளைத் திறந்து, பார்வையில் எதையாவது கண்டு விட்டால்கூட உடல் அதிர்ந்துவிடும்போல் நெஞ்சில் ஒரு நடுக்கம்.

அண்ணா வீட்டில் இல்லை. ஊரிலேயே இல்லை. பொழுது விடிந்ததும் முதல் பஸ்ஸுக்கே புறப்பட்டுப் போய் விட்டான்.

''அண்ணா! வேண்டாம், போகாதே! வாய்தாவும் விசாரணையும் எப்படி வேணு மானாலும் போகட்டும். எனக்குப் பிடிக்கல்லே. ஒண்ணுமே பிடிக்கல்லே'' என்று மனசு கிடந்து அடித்துக் கொண்டது. ஆனால் ஏனோ பேச்சு வரவில்லை.

''பாகி! கவலைப்படாதே! எல்லாம் நல்லபடியாகத்தான் முடியும். உன்னோட நன்மைக்காகத்தான் செய்கிறேன். அவனுக்குப் புத்தி வரணும். அப்படியே அடங்கிப் போய், கதறிக் கொண்டு வந்து விழுவான், பாரேன்'' என்று கோட்டை கட்டினான் அண்ணா.

பாகீரதி அண்ணாவோடு இடைகழி வரையில் போய் நின்றான். வழியனுப்பவோ, அவன் சொல்லுகிற நம்பிக்கை வார்த்தைகளில் ஆறுதல் அடையவோ அவன் போகவில்லை. 'இனிமேல் வேறு வழியில்லை. வேறே வழி எதுவுமே இல்லை' என்ற நிலைமைக்கு வந்தாகி விட்டது.

ஆறு மாதங்களாய் வியாஜ்யம் நடக்கிறது. மாறி மாறி வாய்தாத் தேதி வந்து கொண்டேயிருந்தது. அண்ணா பறந்து கொண்டு ஓடினான் வக்கீல் வீட்டுக்கும், கச்சேரிக்குமாக. அவன் கூட ஏழெட்டு முறைகள் போய், கூண்டில் ஏறி, கண்ணாடியைக் கழற்றிக் கழற்றிக் கையில் பிடித்துக் கொண்டே வக்கீல் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்லி விட்டு வந்தான். 'இதுதான் கடைசி வாய்தா. தீர்ப்புச் சொல்லி விடுவார்கள்' என்று சொல்லி விட்டுப் போனான் அண்ணா.

என்ன தீர்ப்பு சொல்லிவிடப் போகிறார்கள்? 'மாசம் இரண்டு கலம் நெல். முப்பது ரூபாய் ரொக்கம்....' ஒருத்தனுக்

கு. வேங்கடரமணி



குக் கழுத்தை நீட்டிவிட்டுப் பிறந்த இடமே கதி என்று வந்துவிட்டவளுக்கு ஜீவனாம்சம்!

“அன்று! இது வந்துதானு நான் நிம்மதியாய் வாழ்ந்துவிடப் போகிறேன்? அதற்குப் பதில்.... அதற்குப் பதில்.....” மேலே வார்த்தை வரவில்லை. நினைப்பே விக்கித்துப் போய் விட்டது. விம்மல்தான் வெளியே வெடித்து வந்தது.

“அசடு! உனக்குப் போடச் சோறு இல்லாமயா நான் வழக்கும் வியாஜ்யமுமாய் அலைகிறேன்? அவனுக்குப் புத்தி வரணும். அவமானப்பட்டு உன் காலடியிலே வந்து விழணும்......”

பாரதிக்கு நினைப்புகசிரிட்டது.

“அவனுக்குப் புத்தி வந்து...!”

அவன் — அவளுடைய அவர்— அவளைத் தேடி வந்து, மறுபடியும் இருவரும் இணைந்து வாழ்க்கைச் சகடத்தை மீண்டும் ஓடவிடவா? அதற்காகவா இத்தனையும் நடக்கிறது! அவளுக்கு நம்பிக்கையில்லை. ஆசைப்படவும், கனவு காணவும் கூடத் தைரியம் இல்லை.

முற்றத்து வெய்யில் கூடத்துச் சுவர் மேல் பிரதிபலித்துப் பளிச்சிட்டது. பாரதி, அசைவே இல்லாமல்தான் இன்னமும் படுத்திருந்தாள். உடல் ஓய்ந்து கிடந்தாலும் நெஞ்சை உருக்கும் நினைப்புக்கள் ஓயவில்லை.

“சர்....” சுவரில் பல்லி ஒன்று எழுப்பிய ஒலி அவளைத் திடுக்கிடச் செய்து விட்டது. அவளை அறியாமல் கண்கள் விரித்துக் கொண்டன. வாலைத் தூக்கிக் கொண்டு வேகமாய் ஓடிற்று பல்லி. அவளுடைய பார்வையும் அதைத் தொடர்ந்து தாவிற்று. கடைசியில் —

அந்தப் படத்தின் பின்னால் போய் ஒண்டிக் கொண்டது பல்லி.

அந்தப் படம்தான் இன்னமும் சாட்சி சொல்லிக் கொண்டு நிற்கிறது. கல்யாணப் படம். அன்று ஆசை ஆசையாய்ச் சட்டம் போட்டுக் கொண்டு வந்து மாட்டி இரண்டு வருடங்கள் ஆகின்றன. அவனே ஓடியாடிப் பணம் தேடி முடித்த கல்யாணம். வாழ்வின் புதிய புனிதமான அந்த முதல் நாள்—திருமண நாள் — உயிரற்ற வெற்று உருவமாய் அந்தப் படத்தோடு நின்று விட்டது. நான் ஏன் இதற்குச் சம்மதித்தேன்? 'இந்த ஜன்மம் முழுவதும் இனிமேல் அவரோடு உறவு இல்லை என்று முடிவு பண்ணிக் கொள்ளவா? அப்படியும் முடியுமா? இனிமேல் மாசந் தவறாமல் அவர் படியளக்கப் போகிறார். அதைச் சாப்பிட்டுக் கொண்டு அவரை மறந்து விடுகிறது சாத்தியமா?”

கேள்வி வரிசையில், அசையாது கிடந்த அவளுடைய உடல் திடீரென்று எங்கோ அடித்துக்கொண்டு போவது போல் இருந்தது.



அந்தப் படத்தில் அவர் அவ்வளவு கம்பீரமாக இருக்கிறார்! கொஞ்சம் கனமான அந்த உதடுகள் எப்படி ஓர் அழுத்தத்தை அடக்கிக் கொண்டு ஒன்றியிருக்கின்றன! 'அப்பாவுக்கும் அம்மாவுக்கும் பதில் சொல்ல முடியாமல், வேறே வழியில்லாமல்தான் இந்தக் கல்யாணம் நடந்தது. அவ்வளவுதான்!' அவன் பேசினதே இவ்வளவுதான். அப்புறம் எல்லாம் ஒரே பார்வை. 'நீ போய் விடு. இல்லா விட்டால் நான் போய் விடுவேன், எங்கேயாவது' என்ற அர்த்தம் தெறித்து விழும் பார்வை !

அவளிடம் என்ன குறை ?

அவனுக்கு அவளும், அவளுக்கு அவனும் வாய்த்ததை ஊரே பார்த்துப் பிரமித்துப் போயிற்றே !

மௌனமும், 'போ, போ' என்று கட்ட அந்தப் பார்வையும் அவளை விரட்டிவிட்டது. அவள் வந்து விட்டாள். அண்ணா நடையாய் நடந்து அவனைக் கெஞ்சி விட்டு வந்தான். 'நீ போகாதே அண்ணா ! இனிமேல் அவரைப் பார்க்கிறதிலே அர்த்தமே இல்லே' என்று காரணத்தைச் சொல்லாமல் சொல்ல முடியாமல், முடிவைச் சொல்லி விட்டாள் பாகீரதி. ஆசை, ஏக்கம் எல்லாம் போய் இப்போது வெறுப்புத்தான் மிஞ்சி நிற்கிறது.

''பாகி, பாகி........!''

அண்ணா வந்து விட்டானா ?

அவள் எழுந்து போய்க் கதவை மெதுவாகத் திறந்தாள்.

''என்ன அண்ணா, அதுக்குள்ளே வந்துட்டே ?''

''ஆமாம், எல்லாம் முடிஞ்சு போச்சு.''

மனசிலே அவசரமாய் ஒரு குளிர் பரவிற்று. 'எல்லாம் முடிஞ்சு போச்சா ? எல்லாமா ? அப்படியானால்....!'

''என்ன அண்ணா சொல்றே ?''

''தீர்ப்புச் சொல்லியாச்சு, நாம் கேட்டபடியே கொடுக்கணும் என்று.''

''அவ்வளவுதானே ?''

பாகீரதி நெஞ்சைத் தடவி விட்டுக் கொண்டு உள்ளே வந்தாள். தம்ளரில் மோருடன் திரும்பி வந்து, கூடத்து ஊஞ்சலில் அண்ணாவுக்குப் பக்கத்தில் வைத்தாள்.

''அவன்கூட இன்னிக்கு வந்திருந்தான் பாகி !''

''உன்னைப் பார்த்தாரா? ஏதாவது பேசினாரா ?''

''ஊஹூம் !''

பாகீரதி சமையலறைக்குள் போய்ப் புகுந்து கொண்டாள். கொஞ்ச நேரம் முன்னால் ஓய்ந்து போய்க் கிடந்த அவள் உடம்பு இப்பொழுது படபடத்தது. அவன் உருவத்தை அந்தப் பார்வையை நினைத்துக் கொண்டாள். 'எல்லாம் முடிஞ்சு போச்சு' என்று அண்ணாவின் குரல் அவள் நெஞ்சுக்குள் கேட்டது.

சே, என்ன வாழ்க்கை, என்ன மனிதர்கள் ! எல்லாம் பாதிக் கனவு.

## 2

''ராஜா ! ராஜா !''

கூடத்தில் கரகரப்புக் குரல் கேட்டது.

'அண்ணா கிணற்றடியில் — இதோ வந்துட்டேன்' வார்த்தையாக உருப்பெறாத நினைவின் அவசரத்தை அவள் சுமந்து கொண்டு பின்புறம் ஓடினாள்.

''வாங்கோ'' என்று அழைக்காமல் வந்து விட்டது அப்புறந்தான் ஞாபகம் வந்தது.

''அண்ணா! அவர் வந்திருக்கார்.''

''யார் சங்கரனா ?''

''இல்லே. அவரோட அப்பா !''

அண்ணா பிழிந்த வேட்டியை உதறிச் சொடுக்கினான்.

''இதோ, வந்துட்டேன். நீ போ. போய் அவரை உட்காரச் சொல்லு.''

பாகீரதிக்குத் தனியாக உள்ளே போய் அவர் முகத்தைப் பார்க்கவே பயமாய் இருந்தது. அண்ணன் முன்னால் போகிறவரையில் அவள் தவித்துக் கொண்டு அங்கேதான் நின்றாள்.

ஒரு மாதத்துக்கு முன்னால் கோர்ட்டில் சந்தித்த இருவரும், இப்போது எப்படி ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளப் போகிறார்கள் என்ற தவிப்பு அவளுக்கு.

''உம்.... உட்காருங்கோ! நிற்கிறேளே?'' என்று ராஜா கூடத்துக்கு வந்தான்.

''உம்.... உம்....!'' இன்னமும் மாமாவின் பார்வையில் வெறுமை தணியவில்லை. தரையோடு ஒட்டாதவர் போலவே அவர் தூணில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டார்.

''பாகி! தீர்த்தம் கொண்டு வாயேன்.''

அவளுக்கு விநாடி நேரம் அவகாசம் கிடைத்தது கொஞ்சம் நிம்மதியாய் இருந்தது. வாசலில் வண்டி வந்து நிற்பதையும், வண்டிக்காரன் கூடத்து நிகழ்ச்சிகளையெல்லாம் வேடிக்கை பார்ப்பது போல் இடைகழியில் ஒதுங்கி நிற்பதும் அவளுக்குப் புரிந்தது. ஆளைப் பார்க்காமலே முனியன்தான் அவன் என்று உணர்ந்து கொண்டது அவள் உள்ளம். போன வருஷம் இதே முனியன்தான், இதே வில்வண்டியில்தான் அவளைக் கொண்டு வந்து விட்டான். அவள் வாய்விட்டு அழவில்லை. அவளுக்குள் அழுகை கல்லாய் உறைந்து போய்க் கனத்துக் கொண்டிருந்தது அப்போது. 'இனிமேல் எதுவுமே இல்லே' என்ற நினைப்பு, பாறையாய் நெஞ்சில் அடைத்திருந்தது. வழி நெடுகிலும் முனியன்தான் பேசிக் கொண்டே வந்தான்.

''கவலைப்படாதீங்க அம்மா ! சின்னய்யா குணம் அப்படி. தாயில்லாப் பிள்ளை. சின்ன வயசிலே இருந்து செல்லமா வளர்ந்த தோஷம். பிடிவாதம் பிடிச்சா அப்படித்தான். கொஞ்ச நாள் போகட்டுங்க. மகமாயி புண்ணியத்திலே அவரு மனசு மாறி......''

முனியனின் குரல் உடைந்து போயிற்று.

முனியன் அன்றைக்குத் திரும்பிப் போகும் போது இடைகழியில் இதே இடத்தில் நின்று விம்மினான். பாகீரதிதான் அவனுக்கு ஆறுதல் சொல்லி வழியனுப்பி வைத்தாள். அன்று தனக்கு அதற்குத் தெம்பு இருந்ததை இந்த நிமிஷத்தில் நினைத்துக் கொண்டால் ஆச்சரியமாய் இருக்கிறது. இப்பொழுது முனியனின் முகத்தைப் பார்க்கக்கூட அவளுக்குச் சக்தி இல்லையே !

# தொழில் மந்த நிலையை சமாளிக்க தொழில் நுட்பம் தேவைப்படுகிறது

எமது தொழிலிலும் மந்த நிலை கடுமையாகத்தான் இருக்கிறது. நாங்களும் மந்த நிலையை எப்படி சமாளித்து நிலைபெறச் செய்கிறது என்று கவலைப்படலாம். ஆனால் இண்டியன் ஆக்ஸிஜன் ஸ்தாபனத்தில் அப்படி ஓய்ந்துவிடுவது பழக்கமில்லை. தொழிலில் மந்த நிலை என்றாலே அதை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு விடுவோம். நாங்கள் இந்நிலையை சமாளிக்கும் முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுவோம்.

உதாரணமாக எமது மார்க்கெடிங் பிரிவில் தென் கிழக்கு மற்றும் மேற்கு ஆசிய நாடுகளிலும் ஆப்பிரிக்காவிலும் ஏற்றுமதி செய்வதை மேன்மேலும் அதிகரிக்க ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்தி வருகிறோம்.

எமது என்ஜினியர்களும் விஞ்ஞானிகளும் விரிவான ஆராய்ச்சியின் மூலம் சிறப்பு மிக்க அநேக புதிய தயாரிப்புகளை உருவாக்கி அந்நிய செலாவணியை நிறைய சேமிக்க முயற்சித்து வருகிறார்கள். சென்ற ஆண்டில் மட்டுமே இறக்குமதி செய்யப்படவேண்டிய அநேக பொருள்களை இங்கேயே உற்பத்தி செய்து ரூ. 36 லட்சத்திற்கு அதிகமான அந்நிய செலாவணியை மிச்சமாக்கியிருக்கிறோம். தொழில் துறைகளுக்காக இக்காட்டு மூலப் பொருள்களைக் கொண்டே இண்டியன் ஆக்ஸிஜன் முதன் முறையாகத் தயாரித்து வழங்கிய புத்தம் புதிய தயாரிப்பு வெல்டிங் வேலைக்காக உள்ள இண்டார்க் ஐஎம்ஆர் 300 ஸெலேனியம் ரெக்டிபையர் செட், இண்டார்க் ஸப்மர்ஜ்ட் ஆர்க் வெல்டிங் வயர் மற்றும் ப்ளூனார்க்/ஸிஓ2 ஆடோமாடிக் ஆர்க் வெல்டிங் வேலைக்கான தொடர்பான கவசமுள்ள எலக்ட்ரோடு முதலியவை.

இந்தியத் தொழில்களில் உற்பத்தியை அதிகரிக்கவும், தயாரிப்பு நுட்பங்களை அபிவிருத்தி செய்யவும் சிறப்பாக உதவும் வகையில் ஆக்ஸிஜன், நைட்ரோஜன் மற்றும் இதர வாயுக்களுக்கு புதிய உபயோக முறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இன்னும் அநேக துறைகளில் புதிய சிருஷ்டிகள் தொழில் திறமையை விருத்தி செய்து, தொழில் மந்தத்தின் விளைவுகளை ஜயிக்க உதவுகின்றன.

இந்தியப் பொருளாதாரத்திற்கு சேவை புரிவதில் அநேக மார்க்கங்கள் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. இண்டியன் ஆக்ஸிஜன் தன்னுடைய எதிர்கால வளர்ச்சியில் மட்டுமின்றி நாட்டின் எதிர்கால மேன்மையிலும் நம்பிக்கை வைத்திருக்கின்றது.

IOL இண்டியன் ஆக்ஸிஜன் லிமிடெட்

# 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது

## அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்







ஒரு மாத்திரையில் உள்ள அணுக்கூறு எவ்வளவுக் கெவ்வளவு பெரியதாக உள்ளதோ அது உங்கள் உடலில் கலப்பதற்கு அவ்வளவுக் கவ்வளவு நேரமாகிறது. நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அவ்வளவுக்கவ்வளவு காக்க வேண்டியிருக்கிறது.

மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன —எனவே, அது மேலும் துரிதமாக இரண்டறக் கலந்து விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

**கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டைஅழற்சி • பல்வலி

**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.**

**சாப்பிடும் அளவு:**

**வயது வந்தவர்கள்:** இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.

**குழந்தைகள்:** ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்படி

A.C-28-48TM






**புதிய**

**மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக வலியை வெளியே இழுத்து விடுகிறது.

நிகோலஸ் (N) தயாரிப்பு

''போயிட்டு வரேன், சின்னம்மா! உங்க கவலே வடிஞ்சுடும். ஒரு நாளேக்கு நானே வண்டியை ஓட்டிக் கொண்டு வந்து உங்களைத் திரும்ப அழைச்சுக்கிட்டுப் போறேன், பாருங்களேன்.'' வெற்று வண்டியை ஓட்டிக் கொண்டு போனான் முனியன்.

கூஜாவையும் தம்ளரையும் மாமனாரின் எதிரில் கொண்டு வந்து வைத்ததும் பழைய எண்ணங்கள் சிதறிப் போயின.

பாகீரதி பிரளயமாய்ச் சுழித்த 'இனி மேல்?' என்ற கேள்வியுடன் அவர் எதிரில் நமஸ்கரித்தாள். என்ன செய்கிறோம் என்ற புரிபடாத நிலையில் வணங்கி எழுந்ததும், அவள் சுற்றிலும் பார்த்தாள். இன்று அவளுக்கு அத்தனை உறவும் பாத்தியமும் இல்லை என்று கூட்டம் அவளைச் சூழ்ந்துகொண்டது.

அண்ணாவின் முகத்தில் சுயாடவில்லை. மாமா அவசரமாய் முகத்தைத் திருப்பிக் கொண்டார். அவருடைய உதடுகள் படபடத்தன. ஆனால் அவற்றில் அவளை ஆசிர்வாதம் செய்யும் வார்த்தைகள் இல்லவே இல்லை.

அவள் உள்ளே சென்று விட்டாள். கூடத்தில் மௌனத்தின் கனம் சில நிமிஷங்கள் வியாபித்திருந்தது.

'தன்னை மீண்டும் அழைத்துப் போகத் தான் மாமா வந்திருப்பாரோ?' என்ற ஆசைக்கு இனிமேல் இடமே இல்லை. அதற்கு ஏன் இந்த மௌனம், தயக்கம்?

''ராஜு!''

கரகரப்புக் குரல்.

''ஏன்?''

''ஒரு மாசம் ஆச்சே?''

''எதுக்கு?''

''தீர்ப்புச் சொல்லித்தான்.''

''அதுக்கு என்ன இப்போ?''

அண்ணாவின் குரலில் கடுமை கலந்து கிரீச்சிட்டது.

''தீர்ப்புப்படி கொடுக்க வேண்டியதைக் கொடுத்துட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''அதுக்குத்தான் நீங்களே 'வந்தேளா?''

ராஜு ஏமாற்றத்தோடு அலட்சியமாய்க் கேட்டான்.

அவர் தலையை அசைத்தார்.

''உங்களோடே பணம் தேவையில்லே. பாகீரதியைக் காப்பாற்ற எனக்குத் தெரியும். என்னாலே முடியும். அவள் இருக்கிற வரைக்கும் நான் சாப்பாடு போடுவேன்.''

ராஜுவை நிமிர்ந்து பார்த்துக் கொண்டே, ''அப்போ ஏன் கோர்ட்டுக்குப் போகணும்?'' என்று கேட்டார் பாகீரதியின் மாமனார்.

''நான் சொல்லணுமா! நீங்களே புரிஞ்சுக்கலேயா?''

சமையலறையிலிருந்து எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதானிருந்தாள் பாகீரதி.

''அண்ணா அண்ணா!'' என்று அழைத்தாள் அவள் அடக்கமான குரலில், ஆனால் ஒரு தீர்மானத்தோடு.

ராஜு உள்ளே வந்து எட்டிப் பார்த்தான்.

''ஏன் அவர் கொடுக்கிறதை வேண்டாங்கறே அண்ணா?''

''பின்னே என்ன சொல்கிறது?''

''பேசாம வாங்கிக்க வேண்டியதுதான்.''

''என்ன சொல்கிறே பாகி?''




''ஏய், மாது! நீ சுத்த 'ஹென் பெக்ட்' - பெண்டாட்டிக்குப் பயந்தவன்!''

''டேய்! வாயை மூடுடா: நல்ல காலம் நீ தப்பினே! என் பெண்டாட்டி இங்கே இல்லே. இருந்திருந்தால் என்ன ஆகியிருக்கும் தெரியுமா, உனக்கு?''

அவனுக்கு மறுபடியும் கோபம் வந்து விடும் போலிருந்தது. அதற்காகப் பாகீரதி பயப்படவில்லை.

''கொடுக்கட்டுமே, அண்ணா! இதை யாவது அவர்கள் செய்யட்டுமே.''

ராஜு அடங்கி விட்டான்.

''எனக்குத் தேவையில்லே; அதான் வேண்டாம்னு சொன்னேன்.''

''எனக்கு வேணும்.''

ராஜு அப்போதுதான் அவளைப் பார்ப்பதுபோல் புதிய பார்வையில் பார்த்தான்.

வந்த காரியம் முடிந்து, சங்கரனின் அப்பா புறப்பட்டு விட்டார். ஒரு வாய்த் தண்ணீர்கூட அவர் குடிக்கவில்லை.

## 3

ஒரு மாதம் கழிந்து விட்டது.

வாழ்வதற்கு எந்த ஆதாரமும் இருப்பதாகத் தோன்றவில்லை பாகீரதிக்கு. ராஜு கூட இப்பொழுதெல்லாம் அவளிடம் சரியாகப் பேசுகிறதில்லை. அவன் ஏன் அவளை இப்படிச் சிக்கலில் பிணைத்துவிட வேண்டும்? அவளுடைய கனவுகள் அழிந்த பிறகு, அவளுடைய மனத்தில் புதிய நம்பிக்கையை உண்டாக்க அவன் முயன்றான். சங்கரனின் மனம் மாறிவிடும் என்று எதிர்பார்த்தான். 'நடக்காது' என்று தெரிந்தும் பாகீரதியும் ஆசைப்பட்டு ஏமாந்தாள். அவளுடைய சாப்பாட்டுக்காக அவன் கொடுக்கும் பணந்தான் இனி மேல் அவளுக்கு ஆதாரமா?



**தெரிந்து கொள் !**

வாழ்க்கையில் அடிபட்ட ஒருவர், புதிதாகக் கல்யாணமானவருக்குக் கூறும் புத்திமதி: ''உன் மனைவி ஒரு குண்டூசி கேட்டு, நீ ஒரு யானையையே வாங்கிக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்வாளே தவிர, அதனால் திருப்தி அடைய மாட்டாள். அவள் திருப்தி அடைய வேண்டுமானால், அவள் கேட்ட குண்டூசியையே வாங்கிக் கொடு!''

— ''கற்பூரம்''

---

''சங்கரனுக்கு உடம்பு சரியில்லையாம், தபால் வந்திருக்கு.'' ராஜு கடிதத்தை அவள் எதிரில் போட்டான்.

அவளுடைய உடல் அசையவில்லை. உள்ளம் படபடக்கவில்லை. பாகீரதி நீண்ட நேரம் சிந்தித்தபடியே செயலற்று உட்கார்ந்திருந்தாள்.

''பாகீ! தபாலைப் படிச்சுப் பார்க்கலையா?''

''ஊஹூம்! நீதான் சொல்லேன்.''

''அதுதான் சொன்னேனே! சங்கரனுக்கு ரெண்டு மாசமாய் உடம்பு சரியில்லை.''

''அவ்வளவுதானா ?''

''ஆமாம்.''

''என்னை வரச் சொல்லி எழுதலையா?''

''இல்லை.''

சில விநாடிகளுக்குப் பிறகு ராஜு கேட்டான் : ''எழுதியிருந்தால் நீ போவாயா, பாகீ ?''

பாகீரதிக்கு இந்தக் கேள்வி அதிர்ச்சியாய் இருந்தது. அவள் குழம்பினாள்.

''அதுதான் தபாலில் எழுதவே இல்லையே? அப்புறம் நான் போகிறதைப் பற்றிப் பேச என்ன இருக்கு ?''

பகல் மெள்ள நகர்ந்தது.

சாயங்காலம் வாசலில் வில்வண்டியின் ஓசை கேட்டது. தாழ்வாரத்தில் முற்றத்துத் துளசிச் செடியைப் பார்த்தபடி படுத்திருந்த பாகீரதி, 'யார் வீட்டுக்கோ வண்டி வருகிறது' என்ற நினைப்போடுதான் இருந்தாள்.

''சின்னம்மா ! சின்னம்மா!'' என்ற முனியனின் குரல் அவளை எழுப்பிற்று.

''உங்களை அழைச்சுக்கிட்டுப் போக வண்டி கொண்டாந்திருக்கிறேன்.''

''என்னடா, சொல்றே, முனியா ?''

''சின்னய்யாவுக்கு உடம்பு சரியில்லே. உங்களைப் பார்க்கணுமாம்.''

''நிஜமாத்தானா ?'' என்று முனியனிடம் கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டாள் அவள். பிறகு புறப்படுவதற்குத் தயாரானாள்.

''பாகீ ! நீ மட்டும் தனியாப் போவியா? நானும் வரேனே ?'' என்றான் ராஜு.

''வேண்டாம் அண்ணா ! எனக்கே அங்கே இப்போ ஏன் போகிறோம்னு இருக்கு.''

''அதுக்குச் சொல்லல்லே பாகீ ! நீ இந்தச் சமயத்திலே போய், முனியன் வந்திருக்கிற அவசரத்தைப் பார்த்தா, அப்படி ஏதாவது நடந்துட்டா....'' சொல்லிக் கொண்டே வந்த ராஜு இடுக்கிட்டுப் போய்ப் பாதியில் நிறுத்தி விட்டான்.

பாகீரதிக்கு அதிர்ச்சியாய் இல்லை. ஒன்றும் நடக்காது என்ற நம்பிக்கையா, எது வேண்டுமானாலும் நடக்கட்டுமே என்ற அலட்சியமோ? அவள் புறப்பட்டு விட்டாள்.

## 4

**வ**ண்டி கிளம்பி விட்டது. தெருவைக் கடந்ததும் அவள் முனியனைக் கேட்டாள்.

''என்னையா ? அவரா சொன்னார் ?''

''ஆமாங்க. என்கிட்டே, தனியா இருக்கிறப்போ, 'முனியா நீ உடனே வண்டியைப் பூட்டிக்கிட்டுப் போய்ச் சின்னம்மாவை அழைச்சிக்கிட்டு வாடா'ன்னு சொன்னாங்க. எனக்கே மொதல்லே நம்பிக்கை இல்லீங்க. கர வேகத்திலே பேசறாங்களோன்னு சந்தேகமா இருந்திச்சு. அப்புறமா உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். சுரமா இருந்திச்சு.''

''அப்படியானா சின்னய்யாவுக்கு உடம்பு சாதாரணமாத்தான் இருக்கா முனியா ?''

''சுரம் இல்லே. அதுதான் எனக்குத் தெரியுது. பேச மட்டும் முடியல்லே. நெஞ்சை வலிக்குதாம். அப்படியும் என்னோட நிறையப் பேசினாங்க.''

'என்னவெல்லாம் பேசினார்?' என்று கேட்கத்தான் அவள் உள்ளம் துடித்தது. ஆனால் அந்தப் பழைய தயக்கம் வந்து குறுக்கே நின்றது.

''நீ வந்தது மாமாவுக்குத் தெரியுமா, முனியா ?'' என்று பேச்சைத் திசை மாற்றினாள் பாகீரதி.

''தெரிஞ்சுதான் இருக்கும். நான் சொல்லல்லே. ஏதாச்சும் குறுக்கே பேசிடப் போறாங்களேன்னு நான் அவசரமாய் வண்டியைப் பூட்டி வந்திட்டேன்.''

முனியன் காளைகளை முடுக்கினான். இன்னும் மூன்று மைல் போக வேண்டும். 'கூந்தல் பனை மாரியம்மன் கோயில்தான் வந்திருக்கிறது' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டு வெளிப்புறத்தை எட்டிப் பார்த்தாள் அவள்.

தலை 'ணங்'கென்று வண்டியில் இடித்தது.

''மாரியாத்தா ! நீதான் நல்லபடியாய்ப் பார்த்து வைக்கணும்'' என்று அந்த அவசரத்திலும் வேகத்தைக் குறைத்து, வேண்டிக் கொண்டான் முனியன்.

அவன் பின்புறம் திரும்பிப் பார்த்த போது, உள்ளே புகுந்த புழுதிக்காக அவள் கண்களைப் புடவைத் தலைப்பால் மூடிக் கொண்டிருந்தாள். அவள் அழுவதாக அவன் நினைத்து விட்டான்.

''அழாதீங்க, அம்மா ! நல்லபடியா ஆயிடும் — ஆயிடணும்'' என்று சொன்னான் முனியன். அந்தக் குரலில் நம்பிக்கையைவிட, ஆசையே அதிகமாய்த் தொனித்தது.

''அப்படியானால் — அப்படியானால்...?''

இப்பொழுதுதான் பாகீரதிக்கு அவசரமாய் ஒரு நடுக்கம் உண்டாயிற்று.

''முனியா ! உன்கிட்டே அவர் பேசினதாகச் சொன்னியே. என்னவெல்லாம்

# ஸிரிடோன்

அதிக

## சக்திக்கு உகந்தது





**ஸிரிடோன்** ருசிகரமான சிறந்த பானம். அதிக சக்திக்கு மிகவும் ஏற்றது. பார்லிமாவு, சிறந்த பாலாடை கொக்கோ இவைகளினால் கைபடாதவாறு தயாரிக்கப்பட்டது. சிறியவர்கட்கும், வயதானவர்கட்கும், நோயாளிகட்கும் மற்ற எல்லோருக்குமே மிகச் சிறந்தது.

***ஸிரிடோன் காஃபி மணத்திலும் கிடைக்கும்***

**ஒவ்வொரு கப் ஸிரிடோனும் உங்கள் உடல் நலனைப் பாதுகாக்கிறது.**

தயாரிப்பவர்கள் :-

**ஸவுத் இண்டியா ரிசர்ச் இன்ஸ்டிடியூட் (பி) லிட்.**

விஜயவாடா-7

Ajanta-SIRI. 501

சொன்னார்?'' நெஞ்சின் நடுக் கத்திலே, அவளுக்குள் ஆழப் பதிந்திருந்த கேள்வி வெளியே வந்துவிட்டது.

முனியன் தயக்கத்தோடு, ''அது என்னத்துக்குங்க இப்போ? அதெல்லாம் பழைய கதை '' என்று இழுத்தான்.

பாகீரதி நிமிர்ந்து நட்டார்ந்தாள்.

''சொல்லு, முனியா! எதுவா யிருந்தாலும் இனி மேல் பரவாயில்லே.''

'இனிமேல்' இதற்கு என்ன அர்த்தம்? தொடர்ந்து, புறப் படுகிற போது அண்ணா, 'அப்படி ஏதாவது நடந் துட்டா....' என்று சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தது.

முனியன் குரலைக் கனைத் துக் கொண்டான்.

''எல்லாத்தையும் சொல் லிட்டாலும் ஒருவகையிலே நல்லதுதாங்க. சின்னய்யா என்கிட்டே அவங்களாவே சொல்லலியா? விசயம் இதுதாங்க. ஊர்லே, அதே தெருவிலே கனகம்னு ஒரு பொண்ணுங்க. அப்பா இல்லே அதுக்கு. அம்மாவும் பொண் ணுமாத்தான் இருக்காங்க. அந்த அம்மா வைப்பத்தி ஊரிலே ஒரு மாதிரிப் பேசிப் பாங்க. ஆனா அந்தப் பொண்ணு, மூக்கும் முழியுமா ரொம்ப அழகு. தெருவிலே அது போச்சுன்னா எல்லாரும் கண் குத்திப் பாம்பு கணக்காப் பாப்பாங்க.....!''

பாகீரதி அசையவேயில்லே.

சில விநாடிகள் நிறுத்திவிட்டு முனியன் தொடர்ந்தான். ''நம்ம சின்னய்யா படிக் கிற காலத்திலேயே அதுமேலே கொஞ்சம் நிகாவா இருந்தாரு. ஆனா தப்புத் தன் டாவா எதுவும் கெடையாது. அப்புறமா அந்தப் பொண்ணையே கல்யாணம் கட்டிக் கிறேன்னு சொன்னாங்க. நம்ம ஐயா அம்மா வுக்குச் சம்மதமே இல்லே. ஒரு வருசம், இரண்டு வருசம் போயி எப்படியோ சின் னய்யா மனசு மாறிப் பெரியம்மா பேச்சைக் கேட்டு வேறே பொண்ணு பார்க்கச் சம்மதிச் சாங்க.''

''அப்புறம்?''

''அதுக்குள்ளே அந்தப் பெண்ணுக்கும் கல்யாணம் ஆயிடிச்சு. அந்தப் பையன் சாலே முக்கூட்டுலே காப்பிக் கடை வச்சிருக்காரு. அவங்க உள்ளூரிலேயே இருந்தாங்களா? 'முனியா! அதைப் பார்க்கிறப்போ என் மனசு அடிச்சுக்கும். அந்த ஆத்திரத்திலே சின்னம்மாவை வெரட்டிப்பிட்டேன். கனகம் சுகமாத்தான் இருக்கா. ஆனா என் மனசைக் கிளறி விடுறுப்பிலே இருக்கும். அவ தெரு வோட அலட்சியமா என்னைப் பார்த்துட்டுப் போனா!' சின்னய்யாவே இதெல்லாம் சொன்னாருங்க.''

''உம்......!''

''நேத்திக்குக் கனகம் வீட்டுக்கு வந்துச்சு. சின்னய்யாவைப் பார்த்துட்டுப் போச்சு.



கணிதப் பேராசிரியர்: சுருக்க மாகச் சொல்றேன். ஒண் ணோடு சேர்ந்த சைபர் எப்படிப் பத்து ஆகிறதோ அப்படி என் பெண்ணோடு சேர்ந்த உங்க பையனும் ஆவான். கல்யாணத்தை முடியுங்கோ!

'நான் சுகமா இருக்கேன். நீ ஏன் இப்படி இருக்கேன்னு?' அது கேட்டுதாம். அந்த நிமிஷத்திலே இருந்து ஓர் அவசரம். உங்ககிட்டே சொல்லி 'நான் தப்புப் பண் ணிப்பிட்டேன்னு' அழணு மாம்.''

பாகீரதிக்கு நினைவு அழிந்து விட்டது. அவள் பேசவில்லே. வண்டிக்குள் நீண்ட மௌனம் படர்ந்தது.

''சே, எல்லாம் வழக்க மான கதை'' என்று அவள் அந்தச் செய்தியை உதறித் தள்ளினாள். அவன் மன்னிப் புக் கேட்பது. பிறகு அதை யெல்லாம் மறந்து மீண்டும் வாழத் தொடங்குவது..... அவள் ஏமாற்றி ஒதுக்கி விட்டு, மறுபடியும் அவளாகவே அவளைத் திரும்ப அழைத்துக் கொண்டு —

''இதிலே எங்கே வாழ்க் கையின் நிலையான அர்த்தம், ஆதாரம், இருக்கிறது?''

'நான் வரவில்லே, முனியா! நீ போய்ச் சொல்லி விடு' என்று வண்டியை விட்டுக் கீழே குதித்துத் திரும்ப ஓடிப் போய்விட வேண்டும் என்று ஓர் அவசரமான ஆத்திரம் வெடித்தது.

''சஞ்சலப்படாதீங்க, சின்னம்மா! நீங்க வந்துட்டா, உங்களைப் பார்த்து, நாலே நாள்லே எழுந்துடுப்பிட மாட்டாங்களா?''

அவளுடைய நினைப்புக்களைப் புரிந்து கொள்ள முடியாத முனியன் ஆறுதல் சொன்னான்.

பாகீரதி தொடர்ந்து சிந்தித்தாள். அவன் பிழைத்துக் கொள்ளலாம்; அவள் அவனை மன்னித்து விடலாம். அவளுடைய உள்ளத் தில் மீண்டும் ஆர்வம் துளிர்விடுமா?

## 5

வண்டி தெருவுக்குள் நுழைந்து வீட்டு வாசலையும் நெருங்கி விட்டது. திண்ணையில் ஒரே கூட்டம். எல்லாருடைய பார்வையை யும் மிதித்துக் கொண்டு அவள் உள்ளே நுழைந்தாள்.

அழுகுரல் மீண்டும் வெடித்தது. பாகீரதி யின் உடலில் நடுக்கம் அலையிட்டது.

அவன் நினைப்பு.... அவன் நினைப்பு....

அவள் தாழ்வாரத்துத் தூணைப் பிடித்துக் கொண்டு நிற்கிறாள்.

அவளது மனவெளியில் ஒரு வில் வண்டி ஓடுகிறது.

அதை ஒரு நெல் மூட்டை அடைத்துக் கொண்டிருக்கிறது. சங்கரனின் அப்பா உடல் தளர்ந்து அதன் விளிம்பிலே தொற்றிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார். அவருடைய முகத்தில் நிராசையை முந்திக் கொண்டு, அதை அவளிடம் கொண்டு சேர்க்க வேண் டுமே என்ற கவலை இடம் பிடித்துக் கொண் டிருக்கிறது. இனி அவளுடைய வாழ்வில் அதுதான் ஆதாரமோ?



# நெசவு உற்பத்தியிலே 322 ஆண்டுகால மரபோடு முன்னேற்றத்தை இணைப்போர் யார்?



## அது நாங்கள்

322 ஆண்டுகள் அனுபவம் என்றால் சும்மாவா! அது ஏழு நெசவாலைகளின் ஒருங்கிணைந்த அனுபவமாக இருந்தாலும் அது கொஞ்ச நஞ்சமல்ல, அபாரம். எங்களைத்தான் சொல்லுகிறோம்—லால்பாய் க்ரூப். எங்கள் துணிகளோ, பழம்பெரும் பாரத மரபின் ஒரு பகுதியாகும்.

எங்கள் முதல் ஆலை உற்பத்தி தொடங்கிய ஆண்டு 1906: அதன் பின் காலம் மாறிவிட்டது. இருப்பினும் காலத்தோடு ஒட்டி வளர்ந்துள்ளவர்கள் நாங்கள். இன்று எங்கள் ஆலைகள் அதி நவீனமான உத்திகளையும் எந்திர சாதனங்களையும் பயன்படுத்தி, நேர்த்தியான எல்லாவகை செவுகளையும் உற்பத்தி செய்கின்றன. நாட்கள் பல சென்றாலும் நடைமுறையில் இருந்துவரத்தவறாத துணிகள். லால்பாய் டிரேடு மார்க் இருக்கிறதா பாருங்கள். தரமான துணிகளுக்கு அவையே உத்தரவாதம்.

INTERPUB/LG 2A TH

# லால்பாய் க்ரூப்

- தி அரவிந்த் மில்ஸ் லிமிடெட்.
- தி ராய்ப்பூர் மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்.
- தி அசோகா மில்ஸ் லிமிடெட்.
- தி ஸர்ஸ்பூர் மில்ஸ் லிமிடெட்.
- தி அருணா மில்ஸ் லிமிடெட்.
- தி அகமதாபாத் நியூ காட்டன் மில்ஸ் கம்பெனி லிமிடெட்.
- தி நூதன் மில்ஸ் லிமிடெட்.




# இன்னும்

ர. சு. நல்லபெருமாள்

**ப**ரமானந்த சுவாமிகள் பூஜையை முடித்தபோது இரவு ஒரு மணி இருக்கும். அன்று முழுவதும் சுவாமிகளுக்கு ஓய்வே இல்லை. இரவு பன்னிரண்டு மணி வரையும் பக்தர்களின் கூட்டம் மொய்த்துக் கொண்டிருந்தது. அதற்குப் பிறகுதான் சுவாமிகள், குளித்து விட்டுத் தம்முடைய குருநாதரின் படத்துக்கு முன்னால் அமர்ந்து தனிமையில் பூஜையைத் தொடங்கினார்.

பூஜை முடிந்து விட்டது.

குருநாதரின் படத்துக்கு முன்னால் இருந்த விபூதியை அள்ளி நெற்றியில் பூசிக் கொண்டார். கொஞ்ச நேரம் குருநாதரையே உற்றுப் பார்த்தார். குருநாதரின் கண்கள் இவரையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தன. இலேசாகக் குருநாதர் சிரிப்பது போன்ற உணர்வு தட்டியது.

பரமானந்தரின் வலது கை, நீண்டு வளர்ந்திருந்த தாடியை வருடி விட்டுக்கொண்டிருந்தது.

அந்த அறையில் எரிந்து கொண்டிருந்த மின்சார விளக்கை அணைத்துவிட்டு, சன்னல் பக்கத்தில் போய் நின்றார். வெளியே நிலவு காய்ந்து கொண்டிருந்தது. ' ஊர் உறங்கிக் கிடந்தது. சுவாமிகள், சன்னல் வழியாக ஊரைப் பார்த்தார். நிலவு ஒளியில் ஊர், அமைதியாக மூழ்கிக் கிடந்தது.

அந்த ஊரிலுள்ள மில் முதலாளியான செட்டியாரின் பங்களா அது. செட்டியாருக்குச் சுவாமிகளின் குருநாதர் மீது அளவு கடந்த பக்தி உண்டு. இமயமலையில் ரிஷிகேசத்தின் ஒரு பகுதியில் அமைந்திருந்த ஆசிரமத்துக்குச் செட்டியார் விஜயம் செய்து, குரு பிரம்மானந்த சுவாமிகளின் ஆசி பெற்ற பிறகு, செட்டியாருக்கு இருந்த வியாதி குணமாகிவிட்டதால், தீராத பக்தி தோன்றி விட்டது. குருநாதரின் சீடரான பரமானந்த சுவாமிகளுக்கு ராஜோபசாரம் செய்து தம்முடைய பங்களாவின் மாடியில் சுவாமிகளைத் தங்கச் செய்தார் செட்டியார்.

பரமானந்த சுவாமிகள் அந்த ஊருக்குவந்து மூன்று நாட்கள் ஆயின. அதற்குள் அவருடைய அருட்சக்தி ஊர் முழுவதும் பரவி ஆயிரக்கணக்கில் மக்கள் செட்டியார் பங்களாவில் கூட ஆரம்பித்து விட்டார்கள்! இதனால் செட்டியாருக்கு மிகுந்த பெருமை. வரும் கூட்டத்தாரிடமெல்லாம் சுவாமிகளின் அற்புத சக்திகளைப் பற்றிக் கதை கதையாகச் சொல்லுவதில் செட்டியாருக்கு இன்னும் அலுப்புத் தட்டவில்லை.

மக்களும் மந்தை மந்தையாகச் செட்டியார் பங்களாவுக்குத் தினமும் வந்து போனார்கள்.

ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு குறை. பரமானந்த சுவாமிகள், அவ்வளவு குறைகளையும் அக்கறையுடன் கேட்டு, ஆறுதல் சொல்லி, குருநாதரின் பிரசாதத்தையும் கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார்.

இரவு பன்னிரண்டு மணிக்குப் பிறகுதான் சுவாமிகளுக்கு ஓய்வு கிடைத்திருக்கிறது.

"குருநாதா! உலகத்தில்தான் எத்தனை பிரச்னைகள்! எத்தனை ஆசைகள்! எத்தனை

ஏமாற்றங்கள்!'' என்று கூறிக் கொண்டே குருநாதரின் படத்தைப் பார்த்துச் சிரித்தார்.

''உம்..... ஒவ்வொருவருக்கு ஒரு குறை. உலகத்தாருக்கு லௌகிகத்தில் ஏற்பட்ட குறை. எனக்கு ஞானத்தில் ஏற்பட்ட குறை. எப்போது என் தாகம் அடங்கும் சுவாமி?'' என்று ஏக்கத்துடன் கேட்டவாறே குருநாதரின் படத்தைப் பார்த்தார், பரமானந்த சுவாமிகள். குத்துவிளக்கின் ஒளியில் குருநாதரின் உருவம் சிரித்துக் கொண்டிருந்தது.

''பொறு அப்பனே, பொறு!'' என்று கூறுவதுபோலிருந்தது குருநாதரின் சிரிப்பு.

ஒரு முறை மீண்டும் சன்னல் வழியாக வெளியே பார்த்தார். எங்கும் நிசப்தம் நிலவியது. பகல் பொழுதில் மக்கள் உருவில் அவரை வந்து சாடிய ஆசைகளும், துக்கங்களும், ஏமாற்றங்களும் இப்போது அடங்கி ஒடுங்கி உறங்கிக் கிடந்தன.

அத்தனை பரபரப்பும் ஏக்கங்களும் நிறைந்து வழிந்த அந்த நகரம் இப்போது ஏதும் அற்ற ஏகாந்தி மாதிரி மௌனியாகக் கிடக்கிறதே! எத்தனை அமைதி! அந்த அமைதியில்தான் எவ்வளவு இனிமை! இது எப்போதும் நிறைந்திருந்தால்....

சூரியன் உதயம் ஆகும்போதே இந்த உறக்கமும் முடிந்து பழையபடி பரபரப்பும் கூச்சலும், ஏக்கங்களும் கண்ணீரும்தாம் நிரம்பப் போகின்றன.

பரமானந்தரின் தாடி, காற்றில் அசைந்தது. குளிர்காற்று தெம்பைக் கொடுத்தது. தூரத்தில் எங்கோ ஒரு நாயின் ஊளைச் சத்தம் கேட்டது. பக்கத்துச் சந்தில் இரண்டு கழுதைகள் ஓடும் சத்தம் கேட்டது. சினிமாக் கொட்டகையில் இரண்டாவது காட்சி பார்த்துவிட்டு வீடு திரும்பும் சிலர்,



பக்கத்து சந்து வழியாகப் பேசிக் கொண்டு சென்றது காதில் விழுந்தது.

''செட்டியார் வீட்டுக்கு ஒரு சாமியார் வந்திருக்கிறார். தெரியுமா?'' என்று ஒருவன் கேட்டான்.

''தெரியும்.... நான்கூட நேற்று போய்ப் பார்த்தேன். ஆள் எப்படி இருக்கிறார் தெரியுமா....! கருகருவென்று தாடியும், தலையும் பார்க்கவே ஒரு பக்தி வருதுடா. ஏதோ ஒரு சக்தி அவரிடம் இருக்கிறது!'' என்றான் மற்றவன்.

''ஆதியிலே எப்படி இருந்தாரோ ?''

''அதைப் பற்றி நமக்கென்னடா? நதிமூலமும் ரிஷிமூலமும் பார்க்கக் கூடாது.''

பேசியவர்கள் தள்ளிப் போய்விட்டார்கள். அதற்கு மேல் அவர்கள் பேசியது கேட்கவில்லை.

பரமானந்தரின் சிந்தனையில் கடந்த காலம் நிழலாடியது.

''ஆதியில் எப்படி இருந்தாரோ..... ?''— வழியே போனவன் கேட்ட கேள்வி, அவரைக் கிளறிவிட்டு விட்டது.

பழைய நினைவுகள் இன்னும் நெஞ்சில் கசந்தன. ஒரு வெறியில் எல்லாவற்றையும் துறந்துவிட்டு அந்தக் காலத்தில் கும்பகோணத்திலிருந்து வடக்கு நோக்கிப் புறப்பட்டவர், கடைசியில் ரிஷிகேசத்தில் வந்து தான் நின்றார். கங்காநதியில் மூழ்கிக் குளித்த போது, இதயத்தில் பற்றியிருந்த நெருப்பு கொஞ்சம் தணிந்தது போல் இருந்தது. அந்த இடமும் சுற்றுப்புறத்தின் தூய்மையும் பரமசிவனுக்கு—இதுதான் அவரது ஆதிப் பெயர்—சாந்தியைத் தந்தன. ஒரு முறை சுற்றுப்புறத்தை நிதானமாகப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் கரையில் ஒரு துறவி கோவணத்துடன் அமர்ந்து கங்கையின் ஓட்டத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அவரை நெருங்கினான் பரமசிவன்.

இவனைக் கண்டதும், அந்தத் துறவி தலையை நிமிர்த்தினார். அவருடைய கண்களின் தீட்சண்யமான பார்வை பரமசிவத்தின் நெஞ்சுக்குள் புகுந்து துளாவுவதுபோல் இருந்தது. பரமசிவன் மந்திரத்துக்குக் கட்டுண்டவனைப் போல் அவரைப் பார்த்தவாறு சிலையாக நின்றான்.

அவருடைய நீண்டு வளர்ந்து மார்பெல்லாம் மூடிக் கிடந்த வெண்மையான தாடியும், பரந்த நெற்றியும், மெலிந்த உடலும், எதையும் கருணையால் மூடித் தன்னுள் ஆக்கிரமித்துக் கொள்ளும் ஒளிவீசும் பார்வையும் எதைக் கண்டாலும் சிரிக்கும் வாயும், ஒரு குழந்தையைப் போன்ற முகமும் பரமசிவனின் கருத்தை ஈர்த்துக் கொண்டிருந்தன. துறவியின் வயதை நிர்ணயிக்க முடியவில்லை. அறுபது இருக்குமா....? எழுபது....? நூறைக்கூடத் தாண்டியிருக்குமோ...? காலத்தின் எல்லையைத் தாண்டிய ஜீவனோ....?

எந்தக் கணக்குக்கும் அடைபடாத தோற்றம்! துறவி அவனைப் பார்த்துச் சிரித்தார். ஒரு குழந்தையைப் போன்று களங்கமற்ற தெளிந்த சிரிப்பில் பரமசிவன் தன்வசமிழந்தான்.

''சாமி, நொந்துபோய் வந்திருக்கிறேன்'' என்றான் பரமசிவன்.

துறவி பதில் ஏதும் சொல்லவில்லை. பற்கள் தெரியச் சிரித்தார்.

''எனக்கு நீங்கள்தான் அருள் புரிய வேண்டும்'' என்று கூறிக் கொண்டே கீழே விழுந்து வணங்கினான்.

துறவி அசையவே இல்லை. அதே சிரிப்புத்தான். சிரித்துக் கொண்டேயிருந்தார்.

அன்று அந்த ஆசிரமத்துக்குள் நுழைந்த பரமசிவன், பரமானந்த சுவாமிகளாகப் பன்னிரண்டு ஆண்டுகளைக் கடந்து விட்டான்.

குருநாதரை ஆசிரமத்தில், பிரும்மானந்த சுவாமிகள் என்று அழைத்தார்கள்.

அந்த ஆசிரமத்தில் பலர், சீடர்களாயிருந்தனர். யாரும் இதுவரை குருநாதர் பேசிக் கேட்டதில்லை. குருநாதரின் பேச்செல்லாம் உள்ளத்தைக் கவர்ந்து இழுக்கும் அப்பழுக்கற்ற சிரிப்பு ஒன்றுதான்.

ஆண்டு பன்னிரண்டாகியும் பரமானந்தருக்கு இன்னும் குருவின் உபதேசம் கிட்டவில்லை. குருவிடம் அவர் கேட்ட உபதேசமெல்லாம் வெறும் சிரிப்புத்தான்.

அந்தச் சிரிப்புக்குத்தான் அர்த்தமென்ன? எதைக் கேட்டாலும், எதைப் பார்த்தாலும், எதைச் செய்தாலும் குருவிடமிருந்து வருவது, அந்தச் சிரிப்பு ஒன்றுதான். அதற்கு எத்தனையோ அர்த்தங்கள் உண்டு.

பன்னிரண்டு ஆண்டுகளாகக் குருவின் நிழலிலேயே ஒதுங்கிக் கடந்த காலத்தின் வெப்பத்தைத் தணித்துக் கொண்டுவிட்ட பரமானந்தருக்கு ஓர் ஏக்கம் மட்டும் நெஞ்சைவிட்டு அகலவில்லை.

இத்தனை ஆண்டுகளாகியும் குருநாதர் இன்னும் தனக்கு உபதேசம் செய்யவில்லையே என்ற ஏக்கந்தான். குருவின் சிரிப்புக்கெல்லாம் அர்த்தத்தை உணர்ந்து கொள்ளும் ஆற்றல் பன்னிரண்டு ஆண்டுகளில் பரமானந்தருக்கு வந்துவிட்டது. இதுவரை எத்தனையோ மனப் போராட்டங்களுக்கு அந்தச் சிரிப்பில் தீர்வைக் கண்ட பரமானந்தருக்கு இன்னும் ஞானோபதேசம் கிடைக்கவில்லையே !

பன்னிரண்டு ஆண்டு காலத்துக்குள் பரமானந்தர் எத்தனையோ சக்திகளைப் பெற்றுவிட்டார். மனத்தை ஒருநிலைப்படுத்தி, மூச்சடக்கித் தவம் இருக்கக் கற்றுக் கொண்டார். யோக சக்தியால் எத்தனையோ சித்துக்களைப் பெற்றார். உடலை வருத்திப் பெற்ற தவமும் பல சக்திகளை அளித்தன. ஆனால் உள்ளத்துக்கு எதிர்பார்த்த ஆத்ம போதனை இன்னும் கிட்டவில்லை. குருநாதர் இன்னும் போதிக்கவில்லையே.

ஒரு நாள் இரவு நடுநிசி இருக்கும். குருநாதர் கங்கைக் கரையில் நின்று கொண்டு பூரண சந்திரனையே உற்று நோக்கிக் கொண்டிருந்தார். குருநாதரின் அந்தச் செயலை வியப்புடன் பார்த்தவாறே அவரை நெருங்கினார் பரமானந்தர்.

சீடனைக் கண்டதும் குருநாதர் சிரித்தார். பிறகு உயரே சந்திரனைப் பார்க்கத் தொடங்கி விட்டார்.

''சுவாமி !'' — பரமானந்தர் குழைவுடன் கூப்பிட்டார்.

குருநாதர் மீண்டும் சிஷ்யனைப் பார்த்துச் சிரித்தார்.

பண்டிட்
D.கோபாலாசார்லுவின்

**ஜீவாம்ருதம்**

ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்

**அருணா**

மாதர்களின் ஆரோக்யத்திற்கு

**பாலப்ராஸா**

குழந்தைகள் டானிக்

**ரக்த சோதகா**

சிறந்த ரத்தசுத்தி ஔஷதம்

**ச்யவனப்ராசனம்**

இருமலுக்கு

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட்
100, ஜி. என். ரோட், சென்னை-17

---

## ஏஜெண்டுகள் தேவை

சுதேஷ் டெர்ரிகுலின் பாண்டுகள் மற்றும் ஷர்ட்டிங்குகளை, கமிஷன் அடிப்படையில் விற்பனை செய்ய, ஏஜெண்டுகள் தேவை. விலையில் சரசமானது. நீடித்து உழைக்கக் கூடியது. நவீன ரகங்களில் கிடைக்கும். கெட்டி சாயத்திற்கு உத்தரவாதமுள்ளது.

இலவச சாம்பிள்களுக்கு எழுதவும்:

**SUDESH TEXTILE MILLS**

**(K. K. M.) LUDHIANA**

---

டெலிபோன் எண்: 76103 தபால் பெ. எண்: 2910 தந்தி: செத்தில்

# தி இந்தோ மெர்கண்டைல் பண்ட் பிரைவேட் லிட்.

(ரிஜிஸ்டர்ட்: இந்தியன் கம்பெனி சட்டம் 1956க்கு உட்பட்டது)

25, சுந்தரேஸ்வரர் தெரு – மயிலாப்பூர், சென்னை - 4

நடக்கவிருக்கும் சீட்டு குரூப்புகளுக்கு, 1961-ம் வருடத்திய 24-ம் நம்பர் மதராஸ் சீட்டு பண்டுகள் சட்டத்தின் கீழ் நாங்கள் சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொள்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

| வகுப்பு சீரிஸ் | சீட்டு நெ. சீட்டுத் தொகை | மாதத் தவணை | டிக்கெட்டுகள் எண்ணிக்கை | மொத்த காலம் |
|---|---|---|---|---|
| | | தினசரி சீட்டு | | |
| A | ரூ. 9,000 | ரூ. 20 தினசரி | 30 | 450 நாட்கள் |
| B | ரூ. 4,500 | ரூ. 10 ,, | 30 | 450 ,, |
| C | ரூ. 2,000 | ரூ. 5 ,, | 40 | 400 ,, |
| D | ரூ. 800 | ரூ. 2 ,, | 40 | 400 ,, |
| E | ரூ. 400 | ரூ. 1 ,, | 40 | 400 ,, |
| | | மாதாந்திர S. T. | | |
| A | ரூ. 6,000 | ரூ. 200 மாதத்துக்கு | 30 | 30 மாதங்கள் |
| B | ரூ. 3,000 | ரூ. 100 ,, | 30 | 30 ,, |
| C | ரூ. 1,500 | ரூ. 50 ,, | 30 | 30 ,, |
| D | ரூ. 750 | ரூ. 25 ,, | 30 | 30 ,, |
| E | ரூ. 600 | ரூ. 20 ,, | 30 | 30 ,, |
| F | ரூ. 450 | ரூ. 15 ,, | 30 | 30 ,, |
| | | மாதாந்திர L. T. | | |
| A | ரூ. 30,000 | ரூ. 500 மாதத்துக்கு | 60 | 60 மாதங்கள் |
| B | ரூ. 15,000 | ரூ. 250 ,, | 60 | 60 ,, |
| C | ரூ. 7,500 | ரூ. 125 ,, | 60 | 60 ,, |
| D | ரூ. 3,600 | ரூ. 60 ,, | 60 | 60 ,, |
| E | ரூ. 1,800 | ரூ. 30 ,, | 60 | 60 ,, |
| F | ரூ. 1,200 | ரூ. 20 ,, | 60 | 60 ,, |

இதர விபரங்களுக்குத் தேவையான குரூப்பை குறிப்பிட்டு எழுதவும்:

**இந்தோ மெர்கண்டைல் மூலம் சேமித்து பலன் அடையுங்கள்**

கிளை: 1, ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்-1
டெலிபோன் எண்: 21941

M. V. சுப்ரமணியம்
மேனேஜிங் டைரக்டர்

Shilpi bob 10A/67 Tam.




# உங்கள் பணப் பட்டுவாடாக்களை பாங்க் ஆஃப் பரோடா கவனித்துக் கொள்ளும்

**இன்றே பாங்க் ஆஃப் பரோடாவில்
கரெண்ட் அக்கவுண்ட் ஒன்று ஆரம்பியுங்கள்!**

உங்களுக்கு ஆபீஸ் வேலை, குடும்பப் பிரச்னைகள், தொழில் சம்பந்தமான சுற்றுப் பயணங்கள், நண்பர்களையும் உறவினர்களையும் சந்தித்தல், இவற்றைப்போல பல வேலைகள் இருக்கும். எனவே, இன்ஷுரன்ஸ் ப்ரீமியங்களைக் கட்டுவது, வீட்டுவாடகை கொடுப்பது, க்ளப் பில்களைத் தீர்ப்பது, குழந்தைகளின் பள்ளிக்கூடச் சம்பளத்தைக் கட்டுவது அல்லது, டிவிடெண்டுகளையும், இதர பாக்கிகளையும் வசூலிப்பது போன்ற சிறுசிறு சொந்த விஷயங்களைக் கவனிக்க உங்களுக்கு நேரமிருக்காது. எனவே, இந்தச் சிறு விஷயங்களையெல்லாம் பாங்க் ஆஃப் பரோடாவிடம் விட்டு விடுங்கள். இன்றே பாங்க் ஆஃப் பரோடாவில் கரெண்ட் அக்கவுண்ட் துவக்குங்கள்.

உங்களுக்கு செக் புத்தகம் கிடைக்கும். தொகைகளை செக்குகள் மூலம் பட்டுவாடா செய்வதே சிறந்த வழி. அவை நீங்கள் செலுத்தும் தொகைகளுக்குச் சான்றாகவும், உங்கள் அன்றாடச் செலவுகளின் குறிப்பாகவும் இருக்கும்.




என்றென்றும் வளமையுடன் வாழ உங்களுக்கு உதவுகிறது—

**தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்**

(நிறுவனம்: 1908) ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: மாண்ட்வி, பரோடா.
இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் 300 க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன.

உங்களுக்கு அருகிலுள்ள பாங்க் ஆஃப் பரோடா கிளையிலிருந்து, 'உங்கள் சேவை எங்கள் கடமை' என்னும் சிறு பிரசுரத்தை இலவசமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்.

''நான் தங்களிடம் வந்து பன்னிரண்டு ஆண்டுகளாகி விட்டன. எனக்கு இன்னும் ஞானோபதேசம் அருளவில்லையே, குருநாதா!''

பரமானந்தரின் கண்களில் கண்ணீர் முட்டி நின்றது. குருநாதர், ஒரு கணம் சிஷ்யரைக் கூர்ந்து பார்த்தார். பிறகு உரக்கச் சிரித்துக் கொண்டே ஆசிரமத்தை நோக்கிப் போய் விட்டார். அந்த அமைதியான இரவில் குருநாதரின் சிரிப்பு, அந்தப் பிராந்தியம் முழுதும் பரவி எதிரொலித்தது. பரமானந்தரின் கண்களில் நீர் ஆறுகப் பெருகியது. சிரிப்பொலி செவியில் இரைந்து கொண்டே இருந்தது.

அந்தச் சிரிப்பின் அர்த்தமென்ன? இன்னும் எனக்குப் பக்குவம் வரவில்லையா? சிரிப்பில் எவ்வளவு ஏளனம்!

''ப்பூ.... காலத்தின் மொத்தக் கணக்கில் பன்னிரண்டு ஆண்டுகள் ஒரு பெரிய விஷயமாக... காலத்துக்குள் அடங்குவதா உயிரின் பக்குவம்....?'' என்று கேட்பதுபோல் இருந்தது குருநாதரின் சிரிப்பு.

ஆத்ம ஞானத்துக்குக் காலம் ஏது? மனம் பக்குவமடைந்தால் போதும். எப்போது பக்குவம் அடையும்? பக்குவத்தைப் பன்னிரண்டு விநாடியிலும் பெறலாம்; பன்னிரண்டு யுகத்துக்குப் பிறகும் பெறலாம். ஆனால், உணரும் பக்குவத்தைப் பரமானந்தர் அடைய வேண்டாமா?

மறு நாள் காலையில் குருநாதரின் முன்பு போய் நின்ருர் பரமானந்தர்.

''தேசாந்திரம் போய் வருகிறேன்'' என்ருர்.

கருணையுடன் பார்த்தவாறே சிரித்தார் குருநாதர். அனுமதி கிடைத்து விட்டது. தேசாந்திரம் போக அன்றே கிளம்பிவிட்டார் பரமானந்தர்.

தேசாந்திரத்தில் மனம் தெளிவடைந்து பக்குவமடையும் என்ற நம்பிக்கையில் வெளியேறினர் பரமானந்தர்.

சென்ற இடங்களிலெல்லாம் பக்தர்களின் கூட்டம் அவரை மொய்த்தது.

அவருடைய விபூதிப் பிரசாதத்தால் குணமாகிய வியாதிகளுக்குக் கணக்கே இல்லை.

அவருடைய மகிமை வெகுசீக்கிரத்தில் பரவி விட்டது. எத்தனையோ நகரங்களிலிருந்து அழைப்புக்கள் வந்து குவிந்தன. மக்களின் கூட்டத்துக்கு இடையே இருந்து அவர்களின் நொந்த இதயங்களுக்கு ஆறுதல் அளிப்பதிலும் ஒருவித இனிமையை உணர்ந்தார் பரமானந்தர். துன்பத்தில் தோய்ந்து அல்லலுறும் உயிர்களின் வேதனைகளைப் போக்குவதின் மூலம் தம்மைப் பக்குவப் படுத்திக் கொண்டிருந்தார். லௌகிகத்தின் கரடுமுரடான தன்மைகளையும், அதில் ஆழ்ந்து மக்கள், எவ்வளவு தூரம் உழன்று அதனின்று விடுபட முயலாமல் ஆழத்தினுள்ளே அமிழ்ந்து அமிழ்ந்து, அந்த வேதனையிலும் ரசனையைக் கண்டு கொண்டு காலத்தைக் கடத்தும் வேடிக்கையையும் பார்த்துப் பார்த்துப் பரமானந்தர் தம்முடைய இதயத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டிருந்தார்.

எத்தனைவிதமான வாழ்க்கை! எத்தனை விதமான மனிதர்கள்! பிரச்னைக்குள் பிரச்னே! அவிழ்க்க முடியாத சிக்கலைத் தங்களைச் சுற்றிப் பின்னிக் கொண்டு தவிக்கும் மனித இதயங்களின் விசித்திரத்தைப் பிரமிப்புடன் கவனித்தார்.

சீர்காழியில் ஒரு தாசியே வந்துவிட்டாள் அவரிடம் ஆசி பெற! அவள் கேட்டதென்ன? பாவம் தொலைக்க வந்தாளா?

''எனக்கு நீங்கள்தான் என் துன்பம் நீங்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டி அவர் காலில் விழுந்தாள்.

பரமானந்தர், விபூதிப் பிரசாதத்தை அவள் நெற்றியில் இட்டு ஆசி கூறி அனுப்பினர். அவளுக்கு என்ன துன்பமோ? பணம் நிறைய வரவில்லை என்னும் துன்பமா? அல்லது கர்மம் தொலையவில்லையே என்னும் துன்பமா? எதுவாயிருந்தால் என்ன, அவள் துன்பம் நீங்க அவர் காலில் விழுந்தாள். அவரும் எல்லாருக்கும் அளிப்பதுபோல் அவளுக்கும் ஆசியை அளித்தார்.

எங்கெல்லாமோ சுற்றி, யார் யாரை எல்லாமோ சந்தித்து விட்டுக் கடைசியில், இப்போது செட்டியார் பங்களாவில் தங்கியிருக்கிருர். மாடி சன்னல் பக்கம் வந்து நின்று கொண்டு வெளியுலகைப் பார்த்துக் கொண்டே நின்ருர். தூக்கம் வரவில்லை. அவருடைய ஏக்கமெல்லாம் ஞானோபதேசம் பெற



வேண்டும் என்பதுதான்: குருநாதரின் மனம் என்று இரங்குமோ ?

**ம**றுநாள் இரவு, செட்டியார் பங்களாவில் கூட்டம் அளவுமீறிப் பொங்கி வழிந்தது. இரவு பத்து மணிக்கு மேலாகியும் பக்தர்கள் நூறு பேருக்கு மேல் காத்திருந்தார்கள், பரமானந்தரின் தரிசனத்துக்கு. ஒரு வழியாகக் கூட்டம் பதினொரு மணியளவில் குறைந்து ஒன்றிரண்டு பக்தர்கள் மட்டுமே மீதமிருந்தனர்.

திடீரென்று ஏதோ சலசலப்புக் கேட்டது. யாரோ ஒரு பெண் மாடிக்கு வருவதைச் சிலர் தடுத்துக் கொண்டிருந்தார்கள். பக்கத்தில் நின்ற ஒரு பக்தர் பரமானந்தரின் காதுகளில், ''ஒரு பெண் தங்களைக் காண வேண்டுமாம்'' என்று முணகினார்.

''வரட்டுமே?'' என்றார் பரமானந்தர்.

''அவள் ஒரு மாதிரி. நடத்தை சரியில்லை'' என்றார் பக்தர் ரகசியமாக.

''பரவாயில்லை, வரச் சொல்'' என்றார் பரமானந்தர்.

சிறிது நேரத்தில் நடுத்தர வயதுள்ள ஒரு பெண் அவர் எதிரே வந்து நின்றாள். அவள் கண்களில் நீர் மல்கி நின்றது. அவளை விளக்கொளியில் பார்த்த பரமானந்தர் திடுக்கிட்டார். தலையில் சம்மட்டி கொண்டு தாக்கியது போன்ற உணர்வு ஒருகணம் அவரை ஆக்கிரமித்தது. தாடி மண்டிக் கிடந்த முகத்துக்குள்ளிருந்த கண்கள் இரண்டும் அவளை உற்று வெறித்துப் பார்த்தன. பரமானந்தரின் உடல் வியர்வையால் நனைந்தது. ஒரு கணம் உடல் சிலிர்த்து அடங்கியது. ஏதோ காணக் கூடாத ஜந்துவைக் கண்டு விட்டுச் சங்கடப்படுவது போன்ற உணர்வு உள்ளத்தில் குமைந்தது. கடந்த காலத்தையே நினைவிலிருந்து அழித்து விட்டுக் காலியாக வைத்திருந்த உள்ளத்தில் மீண்டும் குப்பைகள் நிரம்பி விட்டதாக மனம் பதறினார்.

''சாமி, என்னுடைய கஷ்டம் தீர அருள் புரிய வேணும்'' என்றாள், அவள் நாக்குழற. பரமானந்தரால் ஒருகணம் ஒன்றும் பேச முடியவில்லை. பிறகு தம்மைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். அவள் அவரையே பயபக்தியோடு பார்த்துக்கொண்டு இரு கைகளையும் கூப்பியவாறு நின்றாள்.

''உனக்கு என்ன சங்கடம்?'' — பரமானந்தர் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டவாறு கேட்டார். அவர் குரல் அவரையும் மீறிச் சற்றுக் கடுமையாக ஒலித்தது.

''எந்த நாளும் எனக்குத் துன்பந்தான்.''

''உன் கணவர்.......?''

''அவர் பிரிந்து போய்ப் பல வருஷங்களாயிற்று. அவர் போன பிறகு இந்த ஊருக்கு வந்து ஒன்றிரண்டு இடங்களில் சமையல் வேலை செய்து பிழைத்துக் கொண்டிருக்கிறேன். இங்கும் எனக்கு நிம்மதி இல்லை.''

''புருஷன் எங்கே இருக்கிறார்?''

''தெரியாது.''

''ஏன் பிரிந்து போனார் ?'' — பரமானந்தர் கேட்டுவிட்டு அவளை உற்றுப் பார்த்தார்.

அவள் சிறிது நேரம் பதில் சொல்லாமல் நின்றாள். பிறகு வாய் குழறியபடி, ''என் தலைவிதி'' என்றாள். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்தது. ஒவ்வொரு சொட்டும் பரமானந்தருக்குத் தீயாகத் தகித்தது. அந்தச் சூழ்நிலையே கசப்பைக் கொடுத்தது. ஓர் அற்ப ஜந்துவை அருவருப்போடு பார்த்து முகத்தைச் சுளிப்பது போல் சுளித்தார்.

''சரி, போ.... நாளைக்கு வா !'' என்று வேறு திசையைப் பார்த்துக் கொண்டே கூறினார். அவள் திரும்பிப் போகும் காலடி ஓசை மறைந்த பிறகுதான் அவர் முகத்தைத் திருப்பினார்.

அவள் வெளியே போய் விட்டாள். ஆனால் அவள் நின்ற இடம் காலியாக இருந்தாலும், அவள் இன்னும் நிற்பது போன்ற பிரமை தட்டியது. கண்களை இறுக மூடிக் கொண்டார். யாரையும் நாளை வா என்று அவர் கூறியதே இல்லை. பக்தர்களுக்கு வியப்பு. சுவாமிகள் இவளுக்கு ஆசி கூறாமல் நாளைவா என்றாரே ஏன் ? ஏன்? இந்தக் கேள்விதான் எல்லாருடைய மனத்திலும் சுழன்றது.

**அ**ன்று இரவு பரமானந்தர் தூக்கமில்லாமல் புரண்டு கொண்டிருந்தார். எதை விட்டு விலக எண்ணி ஆதியில் ஊரைவிட்டு ஓடினாரோ, அது இப்போது அவரை நெருங்கி நின்றது. எந்த நினைவிலிருந்து தப்பித்துக்



கொள்ள நினைத்தாரோ அதே நினைவு. அவரைப் பின்னிக் கொண்டது. நினைவின் பாரம் தாளாமல் படுக்கையில் நெளிந்தார். வாய், "குருநாதா... குருநாதா!" என்று அரற்றிக் கொண்டிருந்தது.

பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன் மாமாங்கத்தன்று கும்பகோணத்தில் நடந்த சம்பவம் நினைவில் வட்டமிட்டது —

மாமாங்கத்துக்குக் கும்பகோணத்தில் கட்டுக்கடங்காத கூட்டம். எல்லாரும் குளத்தருகில் நெரித்துக் கொண்டிருந்தார்கள். பரமசிவனும் கூட்டத்தோடு கூட்டமாக ஜன நெருக்கத்தை ரசித்துக் கொண்டிருந்தான்.

இவ்வளவு கூட்டமும் கோலாகலமும் இங்கிருக்கும் போது கமலம் மட்டும் வீட்டில் என்ன செய்கிறாள்? தலைவலி இருந்தால்தான் என்ன; பன்னிரண்டுவருஷங்களுக்கு ஒருமுறை வரக்கூடிய விழா. போய் அவளை எப்படியும் அழைத்து வந்துவிடலாம் —

பரமசிவன் கூட்டத்திலிருந்து விலகி, வீட்டை நோக்கி விரைந்தான். மாமாங்கக் குளத்தில் மனைவியின் கையைப் பற்றிக் கொண்டு முழுக வேண்டும் என்னும் ஆசை அவனை உந்தித் தள்ளியது. வேகமாக உள்ளே நடந்தான்.

வீட்டு வாசற்கதவு உட்புறம் தாளிடப் பட்டிருந்தது. கதவைத் தட்டப் போகும் தருணத்தில் உள்ளே ஏதோ பேச்சுக் குரல் கேட்டுத் திகைத்து நின்றான். மெதுவாகச் சாவித் துவாரத்தின் வழியாகக் கண்களை இடுக்கிக் கொண்டு உள்ளே பார்த்தான்.

அவன் கண்ட காட்சி....

ஊழித் தீயைத் தலையில் கொட்டியதைப் போன்ற உணர்வு. உடல் கொதித்தது. நடுங்கியது. வியர்த்தது. எல்லாம் ஒருகணந்தான். ஒரே நொடியில் அத்தனை உணர்வுகளும் அவிந்து குளிர்ந்து விட்டன. வீட்டுக்குள் பக்கத்து வீட்டு மைனரின் சிரிப்பொலி இலேசாகக் கேட்டது. பரமசிவனின் நெஞ்செல்லாம் கசப்பு. காறி உமிழ்ந்தான்.

வந்த சுவடே இல்லாமல் திரும்பினான். மாமாங்கக் குளத்தை நோக்கியல்ல. ஊரை விட்டே விலகி, வடக்கு நோக்கி அவனைக் கால்கள் இழுத்துச் சென்று விட்டன.

ஆ.... அந்த நினைவு.... அகன்ற நினைவு. மீண்டும் வந்து ஒட்டிக் கொண்டு உள்ளத்தை யெல்லாம் அழுக்காக்கி விட்டதே !

இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு, அதுவும் இந்த ஊரில் கமலத்தைச் சந்திப்போம் என்று பரமானந்தர் எதிர்நோக்கவில்லையே.

எதிரே தாடியுடன் இருந்த பரமசிவனை— தன் கணவனை — அவள் அடையாளம் கண்டு கொள்ளவில்லை. ஆனால் அவளைப் பார்த்த உடனே பரமானந்தர் தெரிந்துகொண்டாரே.

## கடற்கரையில் கல்லூரி முதல்வர்



கிராமவாசி: ஏன் சார்! இங்கே மீன் காலேஜ் எங்கே யிருக்கு?

பிரின்ஸிபால்: ஏன் அட்மிஷனு?

அந்தக் காட்சி அவர் நெஞ்சில் எப்படிக் கசந்தது.

"அவள் ஒரு மாதிரி. நடத்தை சரியில்லே." — ஒரு பக்தன் கூறியது நினைவில் பேரிரைச்சலாகக் கேட்டது.

"இன்னுமா....? இன்னுமா அப்படி...?"

பரமானந்தரின் மனம் அழுதது.

குருநாதரின் படத்தைப் பார்த்தார். அது சிரித்துக் கொண்டிருந்தது. அதையே கலங்கிய கண்களுடன் உற்றுப் பார்த்தார்.

"ஏன் இந்த அழுகை? யாருக்காக இந்த அழுகை? அவள் யார்? நீ யார்....?"

"ஐயோ அவள் என் மனைவி.... என் மனைவி....."

"இன்னுமா உறவு ?"

" உறவு இல்லே. ஆனால் உறவாயிருந்தாளே....." — பரமானந்தரின் உள்ளம் ஓலமிட்டது. புழுவாகத் துடித்தார்.

மறுநாள் காலையில் செட்டியார் பங்களாவில் ஒரே பரபரப்பு. பரமானந்த சுவாமிகளைக் காலையில் காணவில்லே ! இரவில் படுக்கச் சென்றதை எல்லாரும் பார்த்தார்கள். ஆனால் காலையில் அவர் படுத்திருந்த பாய் மட்டும் காலியாகக் கிடந்தது.

இமயமலைச் சாரலில், கங்காநதி தீரத்தில் தலைவிரி கோலமாக ஓடினார் பரமானந்தர். கங்கைக் கரையில் நின்று கொண்டிருந்த குருநாதரின் பாதங்களில் விழுந்து எழுந்தார். விம்மி விம்மி அழுதார். குருநாதர் வியப்புடன் பரமானந்தரை உற்றுப் பார்த்தார்.

பிறகு 'ஓஹோ' என்று விழுந்து விழுந்து சிரித்தார். இடுப்பைப் பிடித்துக் கொண்டு விடாமல் சிரித்தார். சிரித்துக் கொண்டே ஆசிரமத்தை நோக்கிப் போய் விட்டார்.

குருநாதர் சிரித்த போது, .மிகுந்த பயத்துடன் அவர் முகத்தையே உற்றுப் பார்த்தார் பரமானந்தர். அதில் கமலத்தின் முகமும், சீர்காழித் தாசியின் முகமும் மாறி மாறித் தோன்றின.

குருநாதரின் இடிபோன்ற சிரிப்பொலியின் ஊடே ஏதோ ஒருசன்னமான குரல்கேட்டதே?

"சீர்காழித் தாசிக்கு ஆசி கூறினயே, கமலத்துக்கு மட்டும் ஏன் மறுத்தாய்....? உறவு.....உறவு......"

இப்படி ஒரு குரல் சிரிப்பொலிக்கு ஊடே கேட்டது போல் இருந்தது.

குருநாதரின் சிரிப்பொலி அவர் தூரப் போயும் கேட்டுக் கொண்டிருந்தது. அவர் சிரித்துக் கொண்டே ஆசிரமத்தின் திண்ணையில் அமருவதும், அமர்ந்த பிறகு விடாமல் சிரிப்பதும் தெரிந்தது.

அந்தச் சிரிப்பின் பொருள் என்ன?

'இன்னும் பன்னிரண்டுஆண்டுகள் பொறுத்திரு' என்று பொருள்?

# இதுதான் டாடா-ஃபைஸன்-ராலிஸ் நிறைவு தரும் கற்பகத் தரு!

இதன் அடிமரம் டாடா-ஃபைஸன்-ராலிஸ் நிறுவனத்தை அறிவுறுத்துகிறது. பாரத மண்ணிலே ஆழ வேர் பாய்ச்சி நிற்கின்றது. பாரதநாட்டு விவசாயிகளுக்கும் பயிர் மருந்தும் பாதுகாப்புக் கோட்டையாக விளங்கும் அடிமரம், துயருற்றபோதெல்லாம் துணைதந்து வழிகாட்டி வளமும் பெற உதவுகிறது.

இதன் கிளைகள் பரவிப் பரந்துள்ள ராலிஸ் ஸ்டாக்கிஸ்டுகளையும் வியாபாரிகளையும் சுட்டுகின்றன. அன்னோர் மூலம் ராலிஸ் நம்நாட்டின் எந்தமூலையிலும் உள்ள எளிய உழவரையும் எட்டி, அவர் தம் பிரச்சினைகளைத் தீர்க்கவும் ஓங்கித் தழைக்கும் உயரிய விளைச்சல்களுக்கான உரங்கள், பூச்சிக்கொல்லிகள் அவர் கைக்கெட்டவும் உதவுகின்றன.

இதன் கனிகள் வளமையின் சின்னம், டாடா-ஃபைஸன் ராலிஸ் தயாரிப்புகள், பணிகள் ஆகியவற்றின் உதவியால் தம் விவசாயிகள் அடைந்திடும் செழிப்பான அறுவடையின் அறிகுறி.

ஆக மொத்தம்
அருட் பொழிவு...
நிறைவேற்றம்
கண்ட நற்பேறு...
இதன் உருவகமே
வரமருளும் இம்மரம்!












விஞ்ஞானிகள் வரிசை



# எக்ஸ்ரே மூலம் காணும் உருவ அமைப்பு!



டாக்டர் ராமசேஷன் ''எக்ஸ்ரே கிறிஸ்டலோ கிரபி'' என்ற விஞ்ஞானத் துறையில் ஒரு வசிஷ்டராகக் கருதப்படு கிறார் என்றாலே அவர் இந்தத் துறையில் செய்துள்ள ஆராய்ச்சியின் ஆழத்தையும் அகலத்தையும் அறிந்து கொள்ளலாம்.

இவரது துறையில் ஆராய்ச்சி செய்ய வேண்டுமானால், ஒருவருக்கு ரசாயனம், உலோகங்களின் தன்மை, எலக்ட்ரான் அணுக்களின் தன்மை — இப்படிப் பல்வேறு துறைகளிலும் ஆர்வம் தேவைப்படுகிறது. அதனால்தான் அவரால் பொருள்கள் உருவம் கொள்வதின் பல்வேறு தன்மைகளை நுட்ப மாக ஆராய்ந்து விளக்க முடிகிறது.

கரைந்த உப்புநீரை விட்டு வைத்தால், நீர் வற்றி உப்பு பல கோணங்கள் கொண்ட வடிவம் எடுக்கிறது. அப்படியேதான் சர்க் கரை. இவை அன்றாட வாழ்க்கையில் நாம் காணும் ''கிறிஸ்டல்''கள். இப்படி எத் தனையோ கிறிஸ்டல்கள். வைரம்-கோமேதகம் போன்று எத்தனை எத்தனையோ !

இவை ஏன் இப்படிக் கோணங்கள் கொண்ட வடிவங்களாயின என்பது ஓர் ஆராய்ச்சி.

பட்டை தீட்டிய வைரத்தில் பல்வேறு வண்ணங்கள் வெளிப்படுவதைப் பார்க் கிறோம்.

உண்மையிலேயே அந்தக் கல்லில் வர் ணங்கள்இருக்கின்றனவா, நம் கண்கள்தான் அவற்றைப் பகுத்துப் பார்க்கின்றனவா — என்பது மற்றோர் ஆராய்ச்சி.

இந்த ஆராய்ச்சியில் இறங்கும் போது ஆண்டவன் அளித்த மனிதக் கண்களின் அபார சாமர்த்தியத்தையும், பகுத்துக் காணும் திறமையையும் கண்டு வியக்கிறோம் !

இந்த இருவித ஆராய்ச்சிகளிலும் முன் னோடியாக நம் நாட்டில் விளங்குபவர் ஸர் ஸி. வி. ராமன். அவரது ஆராய்ச்சிக்கூடத் தில் இத்துறையில் ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றார் ஸ்ரீ ராமசேஷன்.

சிற் சில வாயுக்களையும் திரவப் பொருட் களையும் தாழ்ந்த சீதோஷ்ண நிலையில் இறுகச் செய்து, தனி 'கிறிஸ்டல்'களாக்கி, அதனில் எக்ஸ்ரே ரேணங்களைச் செலுத்தி அவற்றின் அமைப்பு முறைகளை ஆராய்வது டாக்டர் ராமசேஷன் எடுத்துக் கொண்ட விஷயம். இந்தத் துறையில் அவரது ஆராய்ச்சி முடிவுகளின் பயனாக உலகப் புகழ் எய்தி யிருக்கிறார்.

டாக்டர் எஸ். ராமசேஷன், இந்திய அக்கௌண்டெண்ட் ஜெனரலாக இருந்து ஓய்வுபெற்ற ஸ்ரீ எஸ். சிவராமகிருஷ்ணனின் புதல்வராவார்.

அவர் நாகபுரி சர்வகலாசாலையில் எம்.ஏ. பட்டம் பெற்றார். பிறகு ஸி. வி. ராமன் அவர்களுடன் ஆராய்ச்சி செய்தார்.

பெங்களூர் இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் ஸயன்ஸில் பௌதிகத் துறையில் 1962 வரை ஆசிரியராகப் பணியாற்றினார்.

பின்னர் சென்னை ஐ. ஐ. டி.யில் பௌதிகப் பேராசிரியராகச் சேர்ந்தார்.

இப்படிக் கிட்டத்தட்ட இருபதாண்டுகள் ஆசிரியப் பணி புரிந்துவிட்டு, பெங்களூர் நேஷனல் ஏரோநாடிகல் லாபரட்டரியில் ஒரு துறையின் தலைமைப் பதவி ஏற்றுக் கொண் டிருக்கிறார்.

இவரது ''கிறிஸ்டல் ஆப்டிக்ஸ்'' என்ற 250 பக்கக் கட்டுரை ஜெர்மன் நாட்டு விஞ்ஞான சஞ்சிகையில் பிரசுரமாகியுள் ளது. இக்கட்டுரை இத்துறையில் ஆராய்ச்சி செய்பவர்களுக்கு இன்றியமையாத, அவசியம் படிக்க வேண்டிய கட்டுரை என்று உலக விஞ்ஞானிகள் கருதுகின்றனர்.

அமெரிக்க விஞ்ஞானக் கழகங்களுக்கும், சர்வகலாசாலைகளுக்கும் பிரிட்டிஷ் ஆக்ஸ் போர்டு சர்வகலாசாலைக்கும் அழைப்புக்களின் மேல் பன்முறை சென்று இந்தத் துறை விஞ்ஞானத்தில் இந்தியாவின் புகழை நிலை நாட்டியிருக்கிறார்.

நாற்பத்தாறு வயது இளைஞரான டாக்டர் எஸ். ராமசேஷன், எப்பொழுதும் நன்றியுட னும் பாசத்துடனும் நினைவுகூர்வது தமது மாணாக்கர்கள் தமக்கு அளித்த ஆர்வத்தை யும் உதவியையும் உற்சாகத்தையும்தான். அதே போல் அவரிடம் பயின்ற மாணவர் களும் விஞ்ஞான ஆசிரியர் என்றால் அவ ரைப் போல் அல்லவோ இருக்க வேண்டும் என்கின்றனர். ஆதாரம்: 'ஹிந்து'





# சிட்டிக்கவிராயரும் சிடி பஸ்ஸும்...!

சுதர்சனச் செல்வன்

சிட்டிக் கவிராயர் சமீபத்தில் சென்னைக்கு வருகை தந்தார். அவர் படு கிராமாந்திரம். தமிழ் படித்தவர் — ஓரளவுக்கு. தமிழ் நெஞ்சம் கொண்டவர். நன்மையாயிருந்தாலும் சரி, தீமையாயிருந்தாலும் சரி, அவர் கவிதை நெஞ்சு துள்ளி எழும். கவிதை மழையைச் சொரியும். அந்த இயல்பின்படி சென்னை வந்த போதும் அவர் நெஞ்சம் சும்மாயிருக்கவில்லை. அதிலும் குறிப்பாக நம்முடைய போக்குவரத்துப் பஸ்களைக் கண்ட போது அவர் சொரிந்த கவிதைகள் ஆயிரம் ஆயிரம்! அவற்றில் சிலவற்றை மட்டும் இங்கே பொறுக்கிக் கொடுத்திருக்கிறோம்.... ஒவ்வொன்றையும் எந்தச் சூழ்நிலையில் பாடியிருப்பார் என்று ஊகிக்க முடிகிறதா பாருங்கள்! முடியாவிட்டால் கீழேயே உள்ளது விளக்கம்!

**கொக்குப் பிடிப்பதுபோல் கொஞ்சம்**
**நயங்கிருந்தே**
**'பக்'கெனவே ஏறிடுவாய் பஸ்!**

விளக்கம்: சிட்டிக் கவிராயர் பலமுறை, தூரத்தில் பஸ் வரும்போதே பார்த்துவிட்டு, தம்மைத் தயார் செய்து கொண்டு பஸ்ஸில் ஏறுவதற்கு ஆயத்தமானார். ஆனால், வந்த பஸ்களெல்லாம் இரட்டை 'விசி' லுடன் நிற்காமல் நேரே சென்றுவிட்டன. இதைக் கண்ட சிட்டிக் கவிராயர், எங்கோ பார்த்துக் கொண்டு, வேறு எதற்கோ காத்திருப்பவர் போல் இருந்தார். அப்போது பஸ் வந்து நின்றது: திடீரெனப் பாய்ந்து ஏறிக்கொண்டார் அவர். இந்த நுட்பத்தைத் தம் பின் சந்ததியினருக்காக இப்படிப் பாடி வைத்திருக்கிறார் சிட்டிக் கவிராயர்.

ஃ ஃ ஃ

**காத்திருக்கும் பேர்வழிக்கும் கண்டக்டர்**
**ஓரொலிதான்**
**பூத்திருக்கும் பூஞ்சோலை யாம்!**

வெய்யில் காலம். பூஞ்சோலையை நாடியது கவிராயர் மனம். அதே இன்பத்தைத் தந்தது கண்டக்டரின் ஒற்றை விசில் சத்தம். இதுவே இரட்டைச் சத்தமாக இருந்தால் அதற்கும் பாடி வைத்திருக்கிறார் கவிராயர்:

**காத்திருக்கும் பேர்வழிக்குக் கண்டக்டர்**
**ஈரொலிதான்**
**சாத்திருக்கும் ரேஷன் கடை!**

ஃ ஃ ஃ

**பின்னுள்ள சீட்டெல்லாம்**
**பெண்களுக்கேயென்பதனால்**
**முன்னுள்ள சீட்டையே**
**முயல்!**

விளக்கம்: கவிராயர் குடையும் கையுமாக பஸ்ஸில் ஏறினாரோ இல்லையோ, பஸ் புறப்பட்டு விட்டது. தடுமாறிப் போனார் கவிராயர். ஆடி, பக்கத்திலிருந்த சீட்டிலேயே உட்கார்ந்து விட்டார். ஆனால், என்ன பரிதாபம்! அடுத்த நிலையம் வந்ததுமே சில நாரீமணிகள் ஏறவும் அவர் 'சீட்'டை ஒழித்துக் கொடுக்க வேண்டியதாயிற்று. 'பெண்கள், புகை பிடிக்கக் கூடாது' என்று பெண்களுக்



சென்று புத்திமதி கூறும் அந்த இடத்தில் தாம் உட்கார்ந்தது தவறு எனக் கண்டார். அதனால் எழுந்ததே இந்தக் கவிதை.

ஃ ஃ ஃ

**முன் வந்தோம் என்றெண்ணி முன்வண்டி**
**ஏறி வந்தோய்**
**பின்வந்தோர் முன்வருவர் பார்!**

விளக்கம்: பாவம், கவிராயர்! ஒரே நம்பருடைய இரண்டு பஸ்கள் வந்து நின்றன. அவற்றுள் முன்னால் நின்றிருந்த பஸ்ஸில் ஏறிக்கொண்டார், தாம் சீக்கிரம் சென்று விடலாம் என்று. ஆனால், அந்த பஸ்ஸோ சற்றுத் தூரம் சென்றதுமே நிறுத்தப்பட்டு டிக்கட் வழங்கப்பட்டது. இதற்கிடையில் பின்னால் நின்ற பஸ் விரைவாக அதைக் கடந்து சென்றது.

ஃ ஃ ஃ

**நீட்டிய கைகண்டே நின்றுவிட்டால்**
**பஸ்ஸொன்று**
**பாட்டிக்கும் ஆண்டுஇரு பத்து!**

விளக்கம்: பஸ்ஸில் பயணம் போய்க் கொண்டிருந்த சிட்டிக் கவிராயர், தாம் ஏறியிருந்த பஸ் சில இடங்களில் நிற்பதும், சில இடங்களில் நிற்காததுமாய்ச் செல்வதைக் கண்டார். பெரும்பாலும் பெண்கள் கைகாட்டிய இடங்களில் பஸ் நின்றது. அதிலும் குறிப்பாக வயதில் குறைந்த பெண்கள் கைகாட்டியபோது பஸ் நின்றது. உலகின் பெரும் புதிராக இருக்கும் 'பெண்களின் உண்மையான வய'தைக் கண்டுபிடிக்க, அவர்கள் கைகாட்டப் பஸ் நிற்கிறதா, இல்லையா என்று பார்க்கும் யுக்தியைக் கையாளலாம் என்ற கருத்து கவிராயர் மனத்தில் உதித்தது!

ஃ ஃ ஃ

**ஒன்பதுபேர் தள்ளுதற்(கு) உந்துவதால்**
**பேருந்தி**
**என்பதுபேர் ஆயிற்றே இங்கு!**

விளக்கம்: கவிராயர் போய்க் கொண்டிருந்த பஸ் திடீரென நின்றுவிட்டது. 'ஸ்டார்ட்' ஆக மறுத்தது. உடனே பலரும் இறங்கித் தள்ள வேண்டியிருந்தது. உந்தி உந்தித் தள்ளிய வண்டிக்குச் சரியான பெயர் அமைந்ததற்காக அவர் மகிழ்ந்து பாடினார்.

# கல்லூரி ஹாஸ்யங்கள்!




★



"என்ன, திடீர்னு ரோட்டிலே தேங்காய்க் கடை வைச்சுட்டேள்?"

"பையன் பாஸ்னு பிரைவேட்டா தெரிஞ்சுது. உடனே பிள்ளையாருக்கு 108 தேங்காய் வாங்கினேன். அப்புறம் பேப்பர்லே பெயில்னு பப்ளிக்கா தெரிஞ்சு போயிடுத்து!"

★

## சதிர் தேங்காய்!



# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தென்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**கேட்பரிஸ் போர்ன்விடா**

3726A-Tm

# பொன்னியின் செல்வ! வருக, வருக!



பல முறை முயன்றும் இக்காவியத்தைச் சுவைக்கும் பேறு எனக்குக் கிட்டவில்லை. இது அமரர் கல்கியின் அற்புதப் படைப்பு என்று இந்நூலைப் படித்தவர்களின் வாயிலாகக் கேட்டு ஏக்கமடைந்தேன். என் இந்த நெடுநாளைய ஏக்கம் நீங்க உதவி செய்யப் போகும் உங்களுக்குப் பன்முறை என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தாராபுரம்
23–5–68 அமிர்த கௌரி

'கல்கி'யைப் புரட்டிக் கொண்டிருந்தபோது ஒரு செய்தியைக் கண்டு நெஞ்சம் ஆனந்தத்தால் 'திக்'கென்று அடைத்துக் கொண்டது. அமரர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்' மீண்டும் வெளியாகப் போவதைக் குறிக்கும் அறிவிப்பு என்னை எல்லையில்லா மகிழ்ச்சிக் கடலில் மூழ்க அடிக்கின்றது.

காரைக்குடி
23–5–68 வெ. பார்த்தசாரதி



வீரம் மிகுந்த வாணர்குல வீரன், வியத்தகு ஒற்றன் வைணவ நம்பி, காதலுக்கு ஓர் இலக்கியம் வகுத்த வானதி, அறிவும் ஆற்றலும் மிகுந்த குந்தவி, பூவின் மென்மை படைத்த பூங்குழலி, அவளுக்கு இலக்கிய அமுது படைத்த சேந்தன் அமுதன்...எனக் கூறிக் கொண்டே போகலாம். யாரைச் சொல்வது? யாரை விடுவது? எல்லாப் பாத்திரங்களும் உயிர்ப் படைப்புக்கள் அல்லவா? எல்லா நிகழ்ச்சிகளுமே காலத்தையும் மறந்து படிக்கத் தூண்டும் களிப்பூட்டும் நிகழ்ச்சிகள் அல்லவா?

புதுதில்லி–12
25–5–68 என். ராஜாமணி



ரா. கி. அவர்கள் படைத்து உலவ விட்ட பல உயிர்ப் பாத்திரங்களோடு உறவாட... மீண்டும் ஒரு வாய்ப்பு!

ஹைதராபாத்–9
25–5–68 ச. சி. கங்காதரன்

அன்று நாங்கள் சிறுவர்கள். இன்று என் போன்ற புதிய தலைமுறையினர் முதன் முதலாக கல்கியில் 'பொன்னியின் செல்வ'னைப் படிக்கப் போகிறோம். எங்களுக்குத்தானே அதிக மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்படும்?

திருவனந்தபுரம்
26–5–68 எஸ். எஸ். மணி



நான் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே யில்லை! என்னையே மறந்து சில வினாடிகள் நின்று விட்டேன்... அவ்வளவு இன்பம்!

கல்கி அவர்களின் நடையழகு — குறிப்பாக உரையாடல் — எவரையும் கவர்ந்துவிடும். அவர் மீண்டும் நம்மையெல்லாம் கால வெள்ளத்தில் தம் பேனாவாகிய துடுப்பால் விநாடிக்கு ஒரு நூற்றாண்டு வீதம் அழைத்துச் சென்று வந்தியத்தேவனை அடைவார். அவ்வீரனோடு மீண்டும் நம்மைச் சோழ நாட்டுக்கு அழைத்துச் செல்வார்.

சென்னை–35
30–5–68 எஸ். ஜெயராமன்

பழுவேட்டரையர்களும், வந்தியத்தேவனும், குந்தவையும், ஆழ்வார்க்கடியானும் மீண்டும் அமரர் 'கல்கி'யோடு தமிழ் கூறும் நல்லுலகில் பவனி வரப் போகிறார்கள்! வரவேற்பு விழாக்கள் நடத்த வாசகர்கள் காத்திருக்கிறோம்!

ஆடம்பர அலங்காரங்களின்றி அன்றலர்ந்தடங்கிய அற்புதத் தமிழ் நடையில் தமிழகத்தின் மகோன்னதச் சரித்திரத்தை இந்தத் தலைமுறைக்கும் அளிக்கவிருக்கும் 'கல்கி' வாழ்க! இனிதே வளர்க!

தர்மபுரி
30–5–68 'தமிழ்க்கிரன்'

'பொன்னியின் செல்வன்' மீண்டும் வருகை தருவது தமிழ் நெஞ்சுக்கு மகிழ்ச்சியளிக்கும். அந்த அமர இலக்கியக் காவியத்தை நான் பள்ளியில் படிக்கும் போது பல முறை விரும்பிப் படித்ததோடு ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை எப்போது வரும் என்று அப்போது ஏங்கியவன். முன்பு வெள்ளிக்கிழமை; இப்போது வியாழக்கிழமை! வித்தியாசம் இதுதான்!

இதயங்கனிந்த வாழ்த்துக்கள்!

சென்னை–1 சிகம்பட்டி
23–5–68 ராஜகோபாலன்

தங்கள் 26–5–68 இதழில் விரைவில் அமரர் 'கல்கி' படைத்த அற்புதமான வரலாற்றுக் காவியமான 'பொன்னியின் செல்வன்' ஆரம்பமாகிறது என்று விளம்பரப்படுத்தியிருப்பது கண்டு கொள்ளை இன்பம் கொள்கிறேன்.

பேராசிரியர் கல்கி அவர்களின் பொன்னியின் செல்வன் முதன் முறை வெளிவந்த போது நான் சிறுபிள்ளை. பின்னர் அக் காவியச் சுவையினை என் அன்னை வாயிலாக அறிந்து அதைப் படிக்கப் பேரவாக் கொண்டு படித்து மகிழ்ந்தேன். இத்தகைய அற்புதக் காவியத்தைப் புதிய இளைய சமுதாயத்துக்காக மீண்டும் படைக்க வந்திருப்பது கண்டு பெருமை கொள்கிறேன்.

தாம்பரம் (கிழக்கு)
25–5–68 மு. நாகரத்னம் பி.ஏ.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# தலைவலியா?

## போக்க ஒரே ஒரு

## ஸாரிடான் போதும்

'ரோஷ்'



## அது உங்களை புத்துணர்ச்சியுடன் திகழச் செய்யும்!

அதுவே **ஸாரிடானின்** தனிச் சிறப்பு

வலிக்கு நீங்கள் சாப்பிட வேண்டியது ஸாரிடான் தான். வலியை விரைவில் போக்க ஸாரிடானுக்கு ஈடான இதர வழிகள் இருக்கலாம். ஆனால் வலியுடன் கூடவே நரம்புகளில் அனுபவமாகும் அழுத்தத்தையும் போக்கி தெம்பும் உற்சாகமும் ஊட்டுவதற்காக பிரத்தியேக முறைப்படி தயார் செய்யப்படுவது ஸாரிடான் ஒன்று மட்டுமே. ஆகவேதான் ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டதும் வலி நீங்கி உங்கள் மூளை சுறுசுறுப்பாக வேலைசெய்ய ஆரம்பிக்கிறது, வேலையில் உற்சாகம் ஏற்படுகிறது, சிடுமூஞ்சி போய் சிரித்த முகத்துடன் திகழ முடிகிறது. ஸாரிடான் அளிக்கும் நிவாரணம் நிலையானது. எப்பொழுதும் ஸாரிடான் உங்கள் கைவசம் தயாராய் வைத்திருங்கள்!

## ஸாரிடான் சாப்பிடுங்கள்



பல்வலி, உடல்வலி, அசௌகரியமான நாட்களில் வலி, இவற்றிற்கும் ஸாரிடான் கைமேல் பலன் தருகிறது. குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை மட்டுமே போதும்.

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

VT. 7067

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி



